**ஒவ்வொரு நாளும் உங்கள் சருமம் சிறிது ஈரப்பசை - யையும், சிறிது இளமையையும் இழக்கின்றது.**



**புதிய ஜான்ஸன்ஸ்* பேபி லோஷன் ஒவ்வொரு நாளும் ஏற்படுகின்ற அந்த இழப்பை ஈடுசெய்கின்றது.**

ஒரு பெண்மணியின் விலை யில்லாப் பொக்கிஷம் அவளது சருமம். எனினும், வயதாக ஆக, அதை அழகாகவே வைப்பது கடினமாகும். வருங் காலத்தில் உங்கள் சருமத்தை அழகாக வைக்கவேண்டு மானால், அதை இன்று முதலே நன்று பராமரிக்கவேண்டும். ஆகையால்தான் உங்களுக் குத் தேவை புதிய ஜான்ஸன்ஸ் பேபி லோஷன். இந்த விசேஷ அழகு லோஷன் சருமத்திற்கு இன்றியமையாத ஈரப் பசையை நிலை நிறுத்துகிறது.

அதோடு, கடுமையான குளிர் மாதங்களில் உங்கள் சருமத்தை மிருதுவாகவும், இளமையுடனும், அழகொளி வீசும்படியும் வைக்கிறது— ஆண்டு முழுவதும் கூட. எனவே, ஒவ்வொரு காலையிலும் இரவிலும் புதிய ஜான்ஸன்ஸ் பேபி லோஷன் உபயோகியுங்கள். உங்கள் முகம், கழுத்து மற்றும் கைகளில் உபயோகித்து, உங்கள் சருமத்திற்குப் பனிபோன்ற புதுமையை அளித்திடுங்கள்.




**புதிய ஜான்ஸன்ஸ் பேபி லோஷன்**

**உங்கள் சருமத்தை மிருதுவாக, இளமை தவழ, அழகொளி வீச வைக்கின்றது.**

புதுப்பாணியை
உருவாக்கும்
பிரிண்டுகள்
நயத்தை
நிலைநாட்டும்
உயர்தரம்.

நீங்கள் எழில் வட்டத்தில்
இன்பமுடன் உலாவ 'டெரீன்'*
உடுத்துங்கள். பிரமிப்பூட்டும்
டிஸைன்கள், தரமிக்க துணிவகைகள்-
யாவும் நாட்டின் சிறந்த ஆலைகளிலிருந்து.
மிகச் சிறந்த இந்த இரண்டுமே உங்களுக்கு.

உங்கள் பணத்திற்குப்
பெறுமானமுள்ளதைப் பெறுங்கள்.

துணிவகைகளின் மீது
'டெரீன்' ட்ரேட் மார்க்கை
நாடி வாங்குங்கள்.







# வரவேற்போம்!











**கார்டன் கிரீனிட்ஜ்**

முதல் தடவையாக இந்தியாவுக்கு வரும் அறுவரில் ஒருவர். இருபத்திரண்டு வயது இளைஞர்; பாட்ஸ்மன், பந்துவீச்சு நிபுணரும் கூட.

**காப்டன் க்ளி. எச். லாயிட்**

டெஸ்ட் மாட்சுகளில் 2535 ரன்கள் குவித்தவர். சதங்கள் இவரிடம் தண்ணீர் பட்ட பாடு! இங்கிலாந்துக்கு எதிராக ஐந்து செஞ்சுரிகளும், ஆஸ்திரேலியாவுக்கு எதிராக இரண்டு செஞ்சுரிகளும் போட்டவர்.

**கே. டி. பாய்ஸ்**

இவரது புகழ் ஒவலில் துலங்கியது. 147 ரன்களுக்குள் 11 விக்கெட்களை வீழ்த்தியது இவரது அபார சாதனை.

**ச. வில்லெட்**

இடதுகை ஸ்பின்னர். பத்தொன்பதே வயதானவர்.

**வி. ஏ. ஹோல்டர்:** வேக வீச்சு நிபுணர்

**விவியன் ரிச்சர்ட்**

நல்ல பீல்ட்ஸ்மன், பாட்ஸ்மன். ஆஃப் பிரேக் பந்துவீச்சு நிபுணர்.

**பி. டி. ஜூலியன்**

மேற்கிந்தியக் கோஷ்டியின் பொக்கிஷம். ரத்தத்தில் விளையாட்டுத் திறமை பரம்பரை பரம்பரையாக ஓடுகிறது! 23 வயதேயானாலும் மேற்கிந்தியத் தீவின் தலைசிறந்த ஆட்டக்காரர் விருதைப் பெற்றவர். வலதுகை பாட்ஸ்மன். இடதுகை பந்துவீச்சு நிபுணர். பீல்டிங்கிலும் சூரர்.

**டேவிட் அந்தோனி முர்ரே**

இவரும் உதவிக் கேப்டன் முர்ரேயும் உறவினரல்ல! ஆனால் ஆட்டத் திறமையில் ஒற்றுமை உண்டு. இருவருமே விக்கெட் கீப்பர்கள். இருவரும் நல்ல பாட்ஸ்மன்கள். 61 'காட்ச்'களும், 13 ஸ்டம்பு அவுட்களும் இவரது விக்கெட் கீப்பிங் திறமைக்குச் சான்று பகரும்.

**ஆர். க்ளி. பிரடெரிக்ஸ்**

இடதுகை ஆட்டக்காரர். இங்கிலாந்தில் 'நாட் அவுட்' 145 ரன்களும் ஐந்து விக்கெட்களும் எடுத்து உலகப் புகழுக்கு அடிகோலினார்.

**டி. எல். முர்ரே**

உதவி காப்டன். ஒரு டெஸ்ட் தொடரில் 24 விக்கெட்டுகளைத் தட்டி ரிகார்ட் கண்ட விக்கெட் கீப்பர்.











## வாழ்த்துவோம்!







ஆல்ரவுண்டர். கிரிக்கெட் போட்டிகளில் மொத்தத்தில் 428 'காட்ச்'களும், 73 ஸ்டம்பு அவுட்களும் செய்து நிறைந்தவர் என்று வாகை சூடியவர்.

**காளிசரண்**

அபாரமான பாட்ஸ்மன் என்ற புகழைப் பெற்றிருக்கிறார்! இடதுகை ஆட்டக்காரர்! பீல்டிங்கிலும் சூரர்!

**எல். ஜி. ரோவி**

இந்தியாவுக்கு வந்து கண்ணாடி போட்டுக் கொள்ளும்படி ஆயிற்று! பாட்டிங் புலி. நியூஸிலாந்து டெஸ்ட் ஒன்றில் 214 ரன்களும் 100 'நாட் அவுட்'டும் இவர் எடுத்த ரிகார்டு! அருமையான 'ஸ்ட்ரோக்' ஆட்டக்காரர். ஆடும்பொழுதே ஒரு டியூனை விஸிலடித்து ஆட்டத்தையும் டியூனையும் ரசிப்பார்.

**லியோனார்ட் பைச்சன்**

இவரும் இடதுகை ஆட்டக்காரர். 1973ல் 216 ரன்கள் போர்டாவில் எடுத்து ரிகார்டு கண்டிருக்கிறார்! நான்கைந்து தடவை 'நாட் அவுட்' பாட்ஸ்மனாக விளங்கியிருக்கிறார்.

**ஏ. ஜி. பாரட்**

'கூக்ளி' பௌலர். தரமான பீல்ட்ஸ்மன், பாட்ஸ்மன்.

**ஆல்பர்ட் பாட்மோர்**

வலதுகை ஆஃப் பிரேக் பௌலர். இடதுகை பாட்ஸ்மன்.

**எல். ஆர். கிப்ஸ்**

ஆஃப்ஸ்பின்நிபுணர். இந்தியாவில் முன்பு 37 ரன்களுக்குள் எட்டு விக்கெட்டுகளை வீழ்த்தியது இவரது இமாலயச் சாதனை.

**ஆண்டர்ஸன் ராபர்ட்ஸ்**

இந்தியக் கோஷ்டியிடம் உள்ள பெரும் குறையை மேற்கிந்தியத் தீவில் இட்டு நிரப்பிக் கொண்டிருப்பவர். அசாதாரண ஃபாஸ்ட் பௌலர்; ஓட்டப் பந்தய வீரரும்கூட.



தொகுப்பு: குண்டுமணி

# What do seven different tyre companies have in common?




That's it. Nircord - India's first nylon tyre cord.
Nircord is the super-strengthener for all
better-grade tyres made in India today.

**nircord**®

® Regd. Trade Mark

**Nirlon Synthetic Fibres & Chemicals Ltd.**

Nirlon House, 254-B, Dr. Annie Besant Road, Bombay-400 025.

Interpub/NIR-C/46A/74

# இயற்கை உங்களுக்கு அளித்துள்ளது எழில்மிகு கேசம்.
## அதனை அவ்வண்ணமே வைத்திருப்பீர்
## ஹேலோ கேச பராமரிப்புமூலம்

ஹேலோ ஷாம்பூக்கள் மட்டுமே சீரான, சிறந்த உத்தியின்படி
தயாரிக்கப்படுகின்றன—உங்கள் கேசத்தின் பராமரிப்பிற்கெனவே

**ஹேலோ காஸ்மெடிக் ஷாம்பூ:**
இந்த விசேஷ ஷாம்பூவை உபயோகித்து, உங்கள் கேசம் எவ்வளவு மெருகேறியும், மிருதுவாகவும் இருக்கக் கூடும் என்பதைக் கண்டு கொள்ளுங்கள்.

**ஹேலோ எக் ஷாம்பூ:**
விசேஷ போஷாக்கு மிக்க இந்த ஷாம்பூவில் உள்ள வளமிக்க முட்டைப் பதார்த்தின் பயனாக உங்கள் கேசம் கட்டுக்கோப்புடன், கவர்ச்சியாகத் திகழ்கிறது.




**ஹேலோ லெமன்—ஃப்ரெஷ் ஷாம்பூ:**
உங்கள் கேசத்திற்கு இயற்கையான தூய்மையான பளபளப்பைத் தருகிறது.

**ஹேலோ கான்ஸென்ட்ரேட் ஷாம்பூ:**
சாதாரணமான நுரையைத்தின் மூலம் உங்கள் கேசத்தை மென்மையாகவும், கட்டுக்கடங்கியும் வைத்திருக்க சிறிதளவே போதும்.

**இயற்கை ஆரோக்கியத்துடன் கூடிய கேசத்திற்கு—இன்றே உபயோகிக்கத் தொடங்குவீர் ஹேலோ**

HSR.G.I.TH

# சர்வாதிகாரப் போக்கு!

இந்திரா அரசு பிறப்பித்திருக்கும் புதிய அவசரச் சட்டம், ஜனநாயகத்துக்குப் பேரிடி; நீதி தேவதைக்குப் பலத்த அதிர்ச்சி!

கள்ளக் கடத்தல்காரர்களைச் சும்மா விடக்கூடாது; கண்டு பிடித்துத் தண்டிக்கத்தான் வேண்டும். யாரும் மறுக்கவில்லை. அதற்கு அரசு திறம்படச் செயலாற்ற வேண்டுமே யன்றி சட்டபூர்வமான ஆட்சிக்கே வேட்டு வைக்கும் முறையிலா நடந்துகொள்வது?

பங்களா தேச விடுதலைப் போர் முடிந்து எத்தனையோ காலம் ஆகிவிட்டது. ஆயினும் நாட்டை இன்னமும் நெருக்கடி நிலைமையி லேயே வைத்திருக்கிறார் இந்திரா அம்மையார். இந்திரா அரசு நினைத்தபடி யெல்லாம் ஆணவத்துடன் இயங்கவும் பல அவசரச் சட்டங்களைப் பிறப்பிக்கவும் உதவுவது இதுவே. இதிலிருந்து பிறந் ததுதான் மிஸா எனப்படும் உள்நாட்டுப் பாதுகாப்புச் சட்டம். இதைக்கூட நீதிமன்றங்கள் தவறு என்று சொல்லவில்லை. மிஸா சட்டத்தின்படி கள்ளக் கடத்தல்காரர்களைக் கைது செய்யும் அதிகாரம் அரசுக்கு உண்டு என்றே சென்னை உயர்நீதிமன்றம் தீர்ப்பளித்திருக்கிறது. ஆனால் போதிய ஆதாரங்கள், சாட்சியங்கள் இன்றி அதிகாரிகள், சிலரைக் கைது செய்திருந்ததால் அவர்களை விடுவிக்குமாறு நீதிமன்றங்கள் உத்தரவிட்டன. இதை இந்திரா அரசினால் பொறுக்க முடியவில்லை! நாம் கைது செய்தவர்களை நீதி மன்றங்கள் விடுவிப்பதாவது என்ற நோக்கத்துடன் செயல்பட்டுப் புதிய அவசரச் சட்டம் பிறப்பித்திருக்கிறது. இனி மிஸா சட்டத்தின் கீழ் கைதுசெய்யப் படுகிறவர்கள் நீதிமன்றத்துக்கே போக முடியாது என்ற நிலை உருவாகியுள்ளது. இதன் விளைவாகப் பாதிக்கப்படப் போகிறவர்கள் போதிய சாட்சியங்களுடன் கைதான உண்மைக் குற்றவாளிகள் அல்ல. அவர்கள் தம்மைக் கைது செய்ததை எதிர்த்து வழக்காடப் போவதில்லை. ஆயின் போதிய ஆதாரமின்றிக் கைதான வர்களுக்குத்தான் இதனால் பெரிய அநீதி விளைகிறது. இவர்கள் மெய்யாலும் குற்றமற்றவர்களாகவே இருக்கலாம் அல்லவா?

கொலைக் குற்றம் புரிந்தவனுக்குக்கூட ஜனநாயகம் நீதிமன்றத் தில் வழக்காடும் உரிமையை வழங்குகிறது, தவறாக ஒருவன் தண் டனை பெற்றுவிடக் கூடாதே என்ற கவலையால். ஆனால் இந்திரா அம்மையாரின் விசித்திர ஜனநாயகமோ, மத்திய மாநில அரசுகளில் பணியாற்றும் — மாவட்ட கலெக்டர், கஸ்டம்ஸ் உத்யோகஸ்தர் வரை உள்ள — எல்லா அதிகாரிகளுக்கும் யாரை வேண்டுமானாலும் நீதி விசாரணையின்றிக் கைது செய்து உள்ளே தள்ளும் அதிகாரத்தை வழங்குகிறது! தட்டிக் கேட்க முடியாது!

இந்த அதிகாரத்தைத் துஷ்பிரயோகம் செய்ய மாட்டார் களாம், சொல்கிறார்கள்! வாஜ்பாய்க்கு இவர்கள் காட்டிய மரியாதை நமக்குத் தெரியாதா? குறைந்தபட்ச அதிகாரம் இருக்கும்போதே மந்திரிகளும் மற்றவர்களும் எத்தனை அட்டகாசம் பண்ணுகிறார்கள் என்பது எல்லாரும் அறிந்த ஒன்று. இவர்களிடம் சர்வாதிகாரத்தை வழங்கினால் கேட்கவா வேண்டும்? இன்னும் கொஞ்ச நாளில் நீதிமன்றங்களுக்கே இங்கே இடமில்லை என்றுகூட ஓர் அவசரச் சட்டம் பிறப்பிக்கப்பட்டால் அதிசயிப்பதற்கில்லை!

அத்தகைய ஒரு சர்வாதிகாரப் பாதையில்தான் இன்று இந்திரா அரசு சென்று கொண்டிருக்கிறது. இதை இந்திரா காங்கிரஸ் தலைவர் தெளிவாகவே கூறியுள்ளார். ''சர்வதேச நோக்கில் நமது ருஷ்ய நட்புறவும் கிழக்கு ஐரோப்பிய நாடுகளுடன் நட்புறவும் இந்திய கம்யூனிஸ்ட் கட்சியுடன் நாம் இணக்கமாகச் செயல்பட வேண்டிய நிர்ப்பந்தத்தை உண்டாக்கியுள்ளன'' என்கிறார். நிர் பந்தம் ஏற்பட்டுள்ளதாம்! கவனியுங்கள்! எல். என். மிச்ராவும் கம்யூனிஸ்ட் கட்சியுடன் ஒன்றி ஒத்துழைப்போம் என்கிறார்.

கள்ளக் கடத்தல்காரர்களுடன் போராடுவதாக ஊரை ஏமாற் றிக்கொண்டே ஜனநாயகத்தைச் சிதைத்து எதேச்சாதிகாரத்துக்கு வழி வகுக்கிறார்கள்!

கல்கி

மலர் 34

இதழ் 16



தமிழ்த்திரு நாடுதன்னைப் பெற்ற தாயென்று கும்பிடடி பாப்பா — பாரதியார்


டில்லியில் புயல்?


தேவை!
கள்ளக் கடத்தல் காரருடன் ஒத்துழைத்த
அரசியல் வாதிகள்

# என்ன சேதி?

## செங்கோல் சீறுகிறது !

திரு ம. பொ. சி. அவர்களின் செங்கோல் பத்திரிகைக்கு நம் மீது ரொம்பக் கோபம்! 'நாட்டின் பொருளாதார நிலைமை இன்றோ நாளையோ என்று திணறிக் கொண்டிருக்கும் போது, கட்டப் பொம்மன் கோட்டையும் வள்ளுவர் கோட்டமும் எதற்கு? அந்தப் பணத்தை வைத்து நிரந்தர வேலை வாய்ப்புக்களை நல்கும் தொழிலகங்களை ஆரம்பிக்கலாமே?' என்று கேட்டுவிட்டோமாம். இது தான் கோபத்துக்குக் காரணம் !

இதற்குப் பதில் சொல்வது போல், 'பாரதி மண்டபம் எழும்பவில்லையா ? காந்தி மண்டபம் உருவாகவில்லையா ? விவேகானந்தர் நினைவுச் சின்னத்துக்குக் கல்கி எதிர்ப்புத் தெரிவித்ததா?' என்றெல்லாம் கேள்விகளை எழுப்புகிறார் 'தமிழன்' செங்கோலில்.

இவர் அடிப்படையான விஷயத்தை மறந்துவிட்டிருக்கிறார். மக்களின் நன்கொடைகளைக் கேட்டுப் பெற்று எழும்பும் நினைவுச் சின்னங்களுக்கும் முழுக்க முழுக்க வரிப் பணத்தைக் கொண்டு உருவாகும் நினைவுச் சின்னங்களுக்கும் ரொம்ப ரொம்ப வித்தியாசம் உண்டு. இவற்றுக்கு இடை நிலையில், மக்களின் நன்கொடைகளையும் கேட்டுப் பெற்று அதற்கு ஏற்ப அரசின் நன்கொடையும் பெற்று உருவாகும் நினைவுச் சின்னங்களும் உண்டு. முதலில் சொன்னதை முழு மனத்துடனும் மூன்றாவதாகக் குறிப்பிட்டதை ''பரவாயில்லை, மக்களின் ஒப்புதல் இருக்கிறது' என்ற அளவிலும் ஏற்கலாம். ஆனால் முழுக்க முழுக்க வரிப் பணத்தைக் கொண்டு ஏகப்பட்ட செலவில் அமைக்கப்படும் நினைவுச் சின்னங்களை வரவேற்பதற்கில்லை. நினைவுச் சின்னங்களை எழுப்புவதற்காக வரி போடுகிறேன் என்றால் யாரும் வரி கட்ட மாட்டார்கள். விவசாயம் செழிக்கும், தொழில் வளம் பெருகும், பொருளாதாரம் கொழிக்கும் என்ற நம்பிக்கையில்தான் மக்கள் வரி செலுத்துகிறார்கள். அவர்கள் எதிர்பார்க்கும் சுபிட்சம் முதலில் தோன்றட்டும். நினைவுச் சின்னங்களைப் பற்றிப் பின்னர் யோசிக்கலாம்.

நினைவுச் சின்னங்களுக்கு இப்பத்திரிகை விரோதி அல்ல. செங்கோல் பத்திரிகை நிதி திரட்டிக் கட்டபொம்மனுக்கும் வள்ளுவருக்கும் அடக்கமான முறையில் நினைவுச் சின்னம் எழுப்ப முன்வந்திருந்தால் நிச்சயம் வரவேற்றிருப்போம்.

## 'வேங்கட்'டை வாழ்த்துகிறோம் !

வேங்கடராகவன் ஹைதராபாத் கிரிக்கெட் ஆட்டத்தின் போது டிக்ளேர் செய்திருக்கக் கூடாது ; அவர் மேற்கிந்திய கோஷ்டியின் திறமையைக் குறைத்து மதிப்பிட்டுவிட்டார் என்றெல்லாம் குற்றம்சாட்டுகிறார்கள்.

ஆனால் வேங்கடராகவன் செய்த 'ஸ்போர்ட்டிங் டிக்ளரேஷன்' வரவேற்புக்குரியது. அப்படி அவர் செய்ததால்தான் மேற்கிந்தியத் தீவினரின் புயல் வேக ஆட்டத்தையும் அபார ஆற்றலையும் நாம் முழுமையாக உணர்ந்து அனுபவிக்க முடிந்தது. நேரில் பார்க்கக் கொடுத்து வைத்தவர்கள் போக, எத்தனை பேர் ரேடியோ முன்னால் உற்சாகத்துடன் குதித்தார்கள் ! ரசிகர்களுக்கும் மேற்கிந்திய ஆட்டக்காரர்களுக்கும் இப்படி ஓர் அரிய வாய்ப்பை ஏற்படுத்தித் தந்த காப்டன் வேங்கடராகவன் வாழ்த்துக்குரியவர். மேற்கிந்தியத் தீவினரின் திறமையை நன்கு உணர்ந்திருந்தும் வேங்கட் டிக்ளேர் செய்ததாக ஏன் கருதக் கூடாது ? ஸ்போர்ட்டிங் டிக்ளரேஷன் என்பதே அதுதானே ?

ராஜாஜி சிந்தனை

### நவீன மரக்கால் விளைச்சலைப் பெருக்குமா ?

சுதந்திரப் பொருளாதாரத்தின் கீழ் தனி நபர்களின் ஊக்கம் ஒட்டுமொத்தமாகச் செயல்பட்டு தேசத்தின் சுபிட்சத்துக்கு வழி வகுக்கிறது. ஊக்கமும் சுதந்திரமும் கட்டுக்கடங்காமல் செயல்பட்டு தீமை விளைவிக்காமல் காக்கும் ஆற்றல் சுதந்திர வர்த்தகத்திலும் தொழிலிலும் இயல்பாகவே உண்டு. தேசத்தில் செல்வம் பெருகி மகிழ்ச்சி நிலவ வேண்டுமானால் இந்த அடிப்படைகளுக்குத் தோள் கொடுக்க வேண்டும். நம்மை முதலாளி வர்க்கம், அது இது என்றெல்லாம் யாரேனும் பழித்துரைப்பார்களோ என்று பயப்படவே கூடாது.

நல்ல ஏர், எருதுகளும் உழைப்புக்கு அஞ்சாத உழவர்களும்தாம் விவசாயப் பெருக்கத்தை ஏற்படுத்த முடியும். அளந்து கொட்டும் மரக்கால்களை ஏராளமாய்த் தயாரிப்பதாலும் அதில் நவீன முன்னேற்றங்களைப் புகுத்துவதாலும் ஒரு மணி நெல்லையாவது அதிகமாக அறுவடை செய்ய முடியுமா?

ஸ்வராஜ்யா, ஜூன் 9, 1962

# யூகோபாங்கின் உதவிக் கரம்-

## இப்பொழுது உங்கள் டெபாஸிட், 14% அதிகமாக பயனுடைய வட்டியைப் பெற முடியும்

உங்கள் சேமிப்புகளை வளர்க்க விரும்பினால் யூகோபாங்க், எல்லா வாய்ப்புகளையும் வழங்குகிறது. இப்பொழுது உங்கள் ஃபிக்ஸட் டெபாஸிட் வட்டியை, ரெக்கரிங் டெபாஸிட் திட்டத்துடன் இணைப்பது மூலம் 14%க்கும் அதிகமான பயனுடைய வட்டியைப் பெற முடியும். அல்லது உங்களது டெபாஸிட்டை எங்களது கேஷ் டெபாஸிட் ஸர்டிஃபிகேட் திட்டத்தின் மூலம் 15 வருடங்கள் பூர்த்தி ஆன பிறகு நான்குமடங்குக்கு மேல் அதிகப்படுத்திக் கொள்ளலாம். வட்டி வருமானமோ 28%க்கு மேல்!

இவை தவிர, எங்களது துரிதமான-நேரடியான சேவைகளுடன் சேமிப்புகள், ஃபிக்ஸட் டெபாஸிட் மற்றும் ரெக்கரிங் டெபாஸிட் திட்டங்களும் எல்லா யூகோ பாங்க் கிளைகளிலும் இயங்கிவருகிறது.

விவரங்களுக்கு அருகிலுள்ள யூகோ பாங்க் கிளையுடன் தொடர்பு கொள்ளுங்கள்.



யுனைடெட் கமர்ஷியல் பாங்க்
தாங்களே தங்களுக்கு உதவ மக்களுக்கு லாபகரமாக உதவுகிறது

UCOC-38 TAM




**தா**ம் சந்நியாசம் வாங்கிக் கொள்வதற்கு அம்மாவின் அநுமதியைப் பெறுவதற்காக ஆதிசங்கரர் செய்த சாமர்த்தியம் உங்களுக்குத் தெரிந்திருக்கும். அம்மாவோடு குளிக்கப் போன பிரம்மசாரி சங்கரர் ஆற்றில் முதலையின் பிடிப்புக்கு வேண்டுமென்றே உட்பட்டார். தாயார்க்காரி பதறிப் போனாள். ''அம்மா, நீ பதற வேண்டாம். நான் சந்நியாசம் வாங்கிக் கொள்ள நீ அநுமதி தந்தால் முதலை என்னை விட்டுவிடும். ஏனென்றால் துறவு பெற்றுவிட்டால் அது மறு ஜன்மா போலாகும். இந்த ஜன்மாவில் முதலையின் பிடிப்புக்கு ஆளாக வேண்டும் என்று எனக்கு விதி இருக்கிறது. அடுத்த ஜன்மாவில் அது என்னைப் பாதிக்காது'' என்றார் சங்கரர். அந்தத் தர்மசங்கடமான நிலையில் பெற்ற தாயார் ஒருத்தி அநுமதி தராமலிருக்க முடியுமா? இவ்விதமாக ஆசாரியாள் சாமர்த்தியம் பண்ணி— தாயாரின் அங்கீகாரம் பெற்று — சந்நியாசியாவதாக அப்போதே சங்கற்பம் செய்து கொண்டார். உடனே முதலையும் அவரை விட்டுவிட்டது.

''இந்த ஜன்மாவில் உனக்கு அருள்பண்ணுவதற்கில்லை'' என்று மகாலக்ஷ்மி வித்யாரண்யரிடம் சொன்னவுடன் இவரும் அதே 'தந்திர'த்தை (Tactics) மேற்கொண்டார். உடனே சந்நியாச ஆசிரமம் வாங்கிக் கொண்டுவிட்டார். ''அம்மா, மறு ஜன்மா வந்துவிட்டது; இப்போது ஐசுவரியத்தைக் கொடு'' என்று லக்ஷ்மியிடம் சொன்னார். அவளும் தன் வாக்குப் பிரகாரம் சொர்ணத்தை வர்ஷித்துவிட்டாள்.

சுற்றிலும் எங்கு பார்த்தாலும் தங்கம், நவநிதியும் கொட்டிக் கிடக்கிறது. சந்நியாசியான வித்யாரண்யருக்கு அதைப் பார்த்ததும் தாங்க முடியாத ஏமாற்றமும் துக்கமுமாகி விட்டது. 'அடடா, தந்திரம் செய்வதாக நினைத்தேன். கடைசியில் கடைந்தெடுத்த சோப்ளாங்கியாக ஏமாந்தல்லவோ போய்விட்டேன்? வீட்டின் ஏழ்மை போவதற்காகத் தனம் யாசித்தேன். இப்போதோ துறவியாகி யாச்சு. இனி மேல் எனக்கு ஏது வீடு? சந்நியாசி பணத்தைத் தீண்டவே கூடாதே. சுயம்கிருத அனர்த்தமாக, நானாகவே அசட்டுத்தனமாக உபத்திரவத்தை வேண்டி வாங்கிக் கொண்டிருக்கிறேனே! விதிப் பிரகாரம் ஏழையாகவே வாழ்ந்து ஆயுசை விட்டிருந்தாலும், அடுத்த ஜன்மாவிலாவது இத்தனை ஐச்வர்யமும் பெற்று ராஜ போகமாக இருந்திருக்கலாமே' என்று அழ ஆரம்பித்துவிட்டார். வித்யாரண்யர் மட்டுமில்லை; நம்மில் ரொம்பப் பேர் இப்படித்தான் வேண்டாததற்கெல்லாம் அம்பாளை வேண்டிக் கொண்டு அவள் நம்மிஷ்டப்படி கிருபை செய்த பின், ''அடாடா, நம்மிஷ்டம் என்று ஏன் ஒன்று இருந்திருக்க வேண்டும்? அவள் இஷ்டம் என்று விட்டிருக்கக் கூடாதா? இப்போது அறியாமையால் அனர்த்த பரம்பரையை அல்லவா வலிய வாங்கிக் கட்டிக் கொண்டிருக்கிறோம்?'' என்று பிற்பாடு விசனிக்க வேண்டியதாகிறது. நமக்கு எது வேண்டும் என்று அவளுக்கே தெரியும் என்று விடுவதுதான் புத்திசாலித்தனம்.

வித்யாரண்யர் மகா புத்திமானாதலால் விசனம் உடனே தெளிந்தது. ஒரு காரணார்த்தமாகத்தான் அம்பாள் இப்படி விளையாடியிருக்கிறாள் என்று புரிந்து கொண்டார். அது மாலிக்காபூரின் தட்சிண தேசப் படை எடுப்பை ஒட்டிய காலம். துருக்கனான மாலிக்காபூர் ராமேசுவரம் வரையில் போய் ஹதாஹதம் செய்திருந்தான். முக்கியமாக நம் பிரசித்தி பெற்ற ஆலயங்களைச் சிதறப் பண்ணினான். நம் தர்மங்களை அழித்தான். அந்த சமயத்தில் அதை எதிர்த்து நிற்க, நல்ல திரவிய வசதியுள்ள ஹிந்து சாம்ராஜ்யம் எதுவும் இல்லை.

இப்போது வித்யாரண்யர் இந்த மகா பெரிய, பரம புண்ணியமான காரியத்தை நினைத்தார். 'இத்தனை நிதி கொட்டிக் கிடக்கிறது. அம்பாள் அநுக்கிரகத்தால் ஒரு ராஜ்ய பரிபாலனத்துக்கு உதவி பண்ணும் அளவுக்கு நமக்குப் புத்தி தீட்சண்யமும் இருக்கிறது. இந்தச் செல்வ பலம், அறிவு பலம் இரண்டையும் கொண்டு ஒரு ஹிந்து சாம்ராஜ்யத்தை மேலோங்கி வருமாறு ஸ்தாபனம் பண்ணுவோம்' என்று நிர்மானித்தார்.

அவருடைய சொந்த நஷ்டம் சநாதன ஹிந்து தர்மத்துக்கே பெரிய லாபமாகப் பரிணமித்தது.



ஆளுநரின் விஜயம். அவரை வரவேற்று அழைத்துச் செல்பவர் திரு ஸோ. பின்னும் திரு ஸ்ரீனிவாசனும் (இடது) திரு ராம மூர்த்தியும்.

(கீழே) கடல்மீது பாலம். இந்த மேம்பாலத்தின் கீழே மற்றொரு பொறி இயல் சாதனை: கடல் மட்டத்தின் அடியில் குடைவரைப் பாதை!

# கல்பாக்கத்தில் ஒரு கற்பகத்தரு!

கல்பாக்கத்தில் உருவாகி வரும் அணுமின் நிலையம் 80 சதவிகிதம் சுதேசி. கட்டட அமைப்பு, ஆலை இயங்குவதற்குத் தேவையான சிறிய பெரிய உபகரணங்கள், உறுப்புக்களைத் தயாரித்தல் போன்ற பலவும் பாரத நிபுணர்களின் உழைப்பினாலேயே உருவாகி வருகின்றன. பெருமைக்குரிய விஷயம்.

கல்பாக்கம் திட்டத்தின் துணைத் தலைமைப் பொறியியலர் திரு எம். எச். பி. ராவ், பல்வேறு பகுதிகளை நிர்வகிக்கும் அதிகாரிகளையும் விஞ்ஞானிகளையும் அழைத்து எனக்கு அறிமுகம் செய்வித்து, ஒவ்வொரிடமாக என்னை அழைத்துச் சென்று காண்பிக்குமாறு ஒரு நொடியில் ஏற்பாடு செய்துவிட்டார்.

மாமல்லைக்கு அருகில் கடற்கரையோரம் அமைந்திருக்கிறது கல்பாக்கம். இந்த இடத்தை ஏன் தேர்ந்தெடுத்தார்கள் அணு உலை அமைக்க? நிபுணர்கள் தரும் காரணங்கள்: சென்னை நகரிலிருந்து 60 கிலோ மீட்டர் தொலைவிலேயே இருப்பதால் துறைமுகத்திலிருந்து பெரிய உறுப்புக்களைக் கொண்டு வந்து சேர்ப்பது எளிது. இரண்டாவது, இது அதிக ஜனசந்தடி இல்லாத இடம். அணு உலை அமையும் இடத்தில் மக்கள் தொகை குறைவாக இருப்பது நலம். உலை இயங்குவதற்குப் பெருமளவில் நல்ல நீர் தேவைப்படுகிறது. அருகிலுள்ள பாலாற்றிலிருந்து குழாய்கள் மூலம் நல்ல தண்ணீர் போதிய அளவு கொண்டுவர முடிகிறது. அணு உலை இயங்குகையில் அதிலிருந்து எழும் மிகுதியான வெப்பத்தைத் தணிக்க அதிகமான நீர் தேவைப்படுவதால் கடல் நீரை இதற்குப் பயன்படுத்தத் திட்டம்.

''அனல் மின் நிலையம், அணுமின் நிலையம்- அடிப்படை வேறுபாடு என்ன?''

''அனல் மின் நிலையத்துக்கு எரிபொருளாகப் பயன்படுவது நிலக்கரி. நிலக்கரியால் நீரைக் கொதிக்க வைத்து அதிலிருந்து வெளிப்படும் நீராவியின் மூலம் 'டர்பைன்'களை இயக்கி அங்கு மின் உற்பத்தி செய்கிறார்கள். கல்பாக்கம் அணுமின் நிலையத்தில் நிலக்கரிக்குப் பதில் யுரேனியம் என்ற உலோகத்தை எரிபொருளாய்ப் பயன்படுத்த விருக்கிறோம். மிகவும் கனமான உலோகமிது'' என்று கூறிவிட்டு, 'கான்பரன்ஸ்' அறைக்கு என்னை அழைத்துச் சென்றார் திரு கலாநிதி.

''இதுதான் சார், யுரேனியம். தூக்கிப் பாருங்களேன்!'' என்றார்.

சாதாரணமாகச் சாளரங்களுக்குப் பொருத்தப்பெறும் எஃகுக் கம்பிகள் பருமனுக்குச் சுமார் முக்கால் மீட்டர் நீளமுள்ள பத்தொன்பது யுரேனியம் கம்பிகளை கட்டாகக் கட்டி ஓர் அட்டைப் பெட்டியில் வைத்திருந்தார்கள். ஒரு கையினால் அதனை அசைத்தேன். ஊஹூம். அசைக்க முடியவில்லை. இரு கைகளாலும் தூக்க முயன்றேன். ஒரு மில்லி மீட்டர்கூட அது அசைந்து கொடுக்கவில்லை. இரும்பைவிடப் பன்மடங்கு அடர்த்தி உள்ள உலோகம் அது.

''இந்த யுரேனியம் எங்கு கிடைக்கிறது?'' என்று வியப்புடன் கேட்டேன்.

''பீகார் மாகாணத்தில் ஜாதுகுடா என்னுமிடத்தில் கிடைக்கிறது. மூலப்பொருள் யுரேனியம் ஆக்ஸைட் எனப்படும். இதனை ஐதராபாத்தில் அணு உலைக்குப் பயன்படும் யுரேனியமாகச் சுத்திகரிப்பு செய்து கல்பாக்கத்துக்கு அனுப்புகிறார்கள்.''

அங்கிருந்து வெளிப்பட்டு, அணு உலை அமைந்துள்ள இடத்துக்கு வந்தேன். அணு உலை அமைந்துள்ள வட்ட வடிவமான சிமெண்ட் காங்கிரீட் கட்டடங்கள் இரண்டும் பிரமாண்டமான உயரமுள்ளவை, குறுக்களவு 130 அடி. உட்புறச் சுவரின் கனம் இரண்டு அடி. இதற்கு வெளிப்புறம் சுற்றிலும் பிரத்தியேக 'டெக்னிக்' குடன் அமைந்த வட்டமான இன்னொரு சுவர்; 2 அடி நாலு



அங்குலம் கனமுள்ளது. கதிரியக்கம் வெளியே பரவாமல் தடுப்பதற்கேற்ற முறையில் அமைமயப்பெற்றது. மிருதியான அழுத்தத்தைத் தாங்கிக்கொள்ளும் பொருட்டே வட்டவடிவமாக இதனை அமைத்துள்ளனர். மேல்புறம் கொட்டாங்கச்சியைக் கவிழ்த்து வைத்தது போன்று 'டோம்' வடிவில் அமைந்துள்ளது. இக் கட்டடத்தின் இரு வட்டச் சுவர்களுக்கும் இடையில் 3 அடி 4 அங்குலம் இடைவெளி உள்ளது. எதிர்பாராத விபத்துக்கள் நிகழக் கூடுமானால் (அப்படி ஏதும் நிகழ்வதற்கான வாய்ப்புக்களே இல்லை என்று நிபுணர்கள் உறுதியளிக்கின்றனர்.) கதிரியக்கம் பரவிச் சுற்றுச் சூழலுக்கு ஆபத்து ஏதும் விளைவிக்காமல் இருக்கவே இந்த ஏற்பாடு.

இக்கட்டடத்தின் உட்புறம் அமைந்துள்ள 'கலாண்ட்ரியா' ( Calandria ) என்ற பாகந்தான் அணு உலையின் இதயம்; ஜீவநாடி. யுரேனியம் எரிபொருள் இதில்தான் பொருத்தப்பெற்று அணுவைப் பிளக்கும் நுட்பமான வேலை நடைபெறுகிறது. ஒரு யு–235 அணுவை ஒரு 'தர்மல்' நியூட்ரான் தாக்கும் போது, அவ்வணு இரு சம கூறுகளாகப் பிளக்கின்றது. அணு பிளக்கும்போது மிகப் பெரும் ஆற்றல் வெப்பத்தின் வடிவில் வெளிப்படுகிறது. தவிர கதிரியக்கமும் 2, 3 நியூட்ரான்களும் தோன்றுகின்றன. இவ்விதம் சங்கிலித் தொடராக அணுக்கள் பிளக்கப்படுகையில் வெளிப்படும் பயங்கர ஆற்றலைத்தான் மின் உற்பத்திக்குப் பயன்படுத்துகிறார்கள். இந்த இயக்கம் நிகழுங்கால் நியூட்ரான்கள் ஒரு விநாடிக்கு 42,000கிலோமீட்டர் வேகத்தில் பாய்கின்றன! இதன் வேகத்தைக் கட்டுப்படுத்தி விநாடிக்கு 1.5 கிலோமீட்டர் என்ற வேகத்துக்குக் குறைப்பது அவசியம். இதற்கு 'ஹெவிவாட்டர்' (திட நீர்) இன்றியமையாதது.

''இந்த 'ஹெவிவாட்டருக்கும்' சாதாரண நீருக்கும் என்ன வேறுபாடு?''

''ஹெவி வாட்டர் பார்வைக்குச் சாதாரண நீரைப் போலத்தான் இருக்கும். சுவையும் ஒரே மாதிரியானதுதான். ஆனால் இதில் கனமான ஜலவாயு ( Deuterium ) அணுக்கள் உள்ளன. ஒவ்வோர் அணு உலையிலும் 2 லட்சம் கிலோகிராம் ஹெவி வாட்டர் பயன்படுத்தப்பெறுகிறது. நங்கல், தூத்துக்குடி முதலிய இடங்களில் இது தயாரிக்கப்படுகிறது.''



அணு உலைக் கட்டடம்.

''இந்த அணு உலைக்கு எவ்வளவு யுரேனியம் தேவைப்படும்?''

''துவக்கத்தில் 63,200 கிலோகிராம் யுரேனியம் எரிபொருளாகப் பயன்படுத்தப்பெறும். அடுத்து, நாள் ஒன்றுக்கு 182 கிலோகிராம் போதும். நிலக்கரியைப் பயன்படுத்தினால் இந்த அளவுள்ள அனல்மின் நிலையத்துக்கு 400 கூட்ஸ் வாகன் அளவு நிலக்கரி தேவைப்படும். யுரேனியம் ஒரு லாரி போதும்.''

இதையடுத்து அணு உலையைப் பற்றி இங்குள்ள விஞ்ஞானிகளும் பொறியியலர்களும் கூறிய விளக்கங்களெல்லாம் யுரேனியம், ஹெவி வாட்டர் ஆகியவற்றைவிடக் கனமான விஷயங்கள்!

''கடலில் பாலம் அமைத்திருக்கிறோமே, அதைப் பார்க்கலாம் வாருங்கள்!'' என்று அழைத்தார் ஒரு சிவில் என்ஜினீயர்.

பாரதப் பொறி இயல் நிபுணர்களின் திறமைக்குச் சான்று பகர்வதாக உள்ளது, கடலிலே அமைக்கப்பெற்றுள்ள இப்பாலம் (ஜெட்டி). கரையோரத்திலிருந்து சுமார் 1100 அடி நீளமுள்ளது. பிரும்மாண்டமான எஃகுக் குழாய்களைக் கடலுக்கடியில் பாறைகளைக் குடைந்து பொருத்தி அவற்றில் சிமெண்ட் கான்கிரீட் போட்டுக் கெட்டித்துத் தூண்கள் அமைத்து அதன் மீது பாலம் போட்டுள்ள திறமையைப் பாராட்டத்தான் வேண்டும்.

இந்த மேம்பாலத்துக்குக் கிழாகக் கடல் மட்டத்தின் ஆழத்தில் ஒரு குடைவறைப் பாதையும் உள்ளது. அது எதற்கு?

இரு அணு உலைகளும் இயங்கும்போது கண்டென்ஸரில் ஏற்படும் வெப்பத்தைத் தணிக்க நாள் ஒன்றுக்குச் சுமார் 750 மிலியன் காலன் நீர் தேவைப்படுகிறது. கடல் நீரை இதற்குப் பயன்படுத்துகிறார்கள். கரையோரத்திலிருந்தே நீரை எடுத்துக்கொள்வதில் ஒரு சிக்கல் இருக்கிறது. கடல் நீருடன் நிரம்ப மணலும் வந்து சேர்ந்துவிடும். அந்த மணலை அப்புறப்படுத்துவது சாத்தியமன்று. கடலின் ஆழமான பகுதியிலிருந்து நீரைப் பயன்படுத்தினால் மணல் வராது. அப்படி ஆழமான பகுதியிலிருந்து கடல் நீரைக் கொண்டு வந்து சேர்க்கக் கடலுக்கடியில் தரை மட்டத்துக்கும் கீழே பாறைகளை வெடிவைத்துத் தகர்த்து 468 மீட்டர் நீளத்துக்குப் பாறைகளினூடே டன்

னல் (Submarine Tunnel) அமைத்துள்ளனர். பாரதத்தில் வேறு எங்கும் காணமுடியாத சாதனை இது. இக்குடைவரைப் பாதையின் குறுக்களவு 3.8 மீட்டர். முழங்கால் உயரமுள்ள ரப்பர் பூட்ஸ், தலைக்கு எஃகுத் தொப்பி, உடல் முழுவதையும் மூடி மறைக்கும் ரப்பர் கோட் இவற்றை அணிந்து கொண்டு 'லிஃப்ட்' மூலம் கடல் மட்டத்துக்குக் கீழே 65 மீட்டர் ஆழம் பாறைக் கிணற்றில் இறங்கிச் சென்றபோது எனக்குக் கொஞ்சம் பயமாகக்கூட இருந்தது! கடலுக் கடியில் கண்கண்ட தூரத்துக்கு வியாபித்துள்ள டன்னலைப் பார்த்துவிட்டு மேலே தரை மட்டத்துக்கு வந்து சேர்ந்தபோது என் உடலெல்லாம் வியர்வையால் தெப்பமாக நனைந்திருந்தது. பயத்தினால் மட்டும் அல்ல! ரப்பர் கோட் அணிந்திருந்ததாலும் அடி மட்டத்தில் உள்ள புழுக்கத்தினாலும்தான்!

அணு உலை அமைந்திருக்கும் இடத்திலிருந்து சுமார் ஒரு மைல் தொலைவில் 'அணு உலை ஆய்வுக் கேந்திரம்' ( Reactor Research Centre) உள்ளது. எதிர் காலத்தில் அணு சக்தித் துறையில் பாரதம் என்னென்ன நடவடிக்கைகளை எடுக்க உத்தேசித்துள்ளதோ அவைகளை யொட்டிய ஆய்வுக் கூடமாக இயங்குகிறது இந்தக் கேந்திரம்.

சென்னை திரும்பியவுடன் கல்பாக்கம் அணுமின் திட்டத்தின் நிருவாகப் பொறுப்பினைத் துவக்கத்திலிருந்தே ஏற்று வந்திருக்கும் திரு என். எஸ். சிவா (அடிஷனல் செகரட்டரி, பாரத அரசு)வைச் சாஸ்திரி பவனில் சந்தித்தேன். உயர்ந்த பதவியை வகிக்கும் எளிமையான மனிதர், திரு சிவா. இவரது திறமையையும் மனிதாபிமானத்தையும் பாராட்டாதவர்கள் இந்த இலாகாவிலேயே இல்லை!

''1957ம் ஆண்டு டாக்டர் பாபாவுடன் எனக்குத் தொடர்பு ஏற்பட்டது. அவருடன் நெருங்கிப் பழகிய பத்து ஆண்டுக் காலம் என் வாழ்க்கையின் பசுமையான பகுதி'' என்றார் திரு சிவா. அந்தப் பசுமையின் முத்திரையைக் கல்பாக்கம் அணு உலை, ஆய்வுக்கூடம், குடியிருப்பு போன்ற ஒவ்வொரு பகுதியிலும் காண முடிகிறது.

''தேவைக்கு அதிகமாக ஒரு மரத்தைக்கூட வெட்டாமல் பாதுகாத்திருக்கிறோம்'' என்று திரு சிவா கூறியபோது அவரது கலையுள்ளமும் அழகுணர்ச்சியும் புலப்பட்டன. அணு உலையிலிருந்து சுமார் நாலு மைல் தொலைவில் அமைந்துள்ள குடியிருப்பைப் பார்த்தபோது ஒரு புதிய நகருக்கே வந்து விட்டதுபோல் இருந்தது. நவீன பாணியில் அமைந்துள்ள 'ஷாப்பிங் ஆர்க்கேட்', கேந்திரீயப் பள்ளி, விளையாட்டு மைதானம், நீச்சல் குளம் எல்லாமே கலையுணர்வோடும், எழிலோடும் திகழ்கின்றன. இங்குள்ள புராதனமான காமாக்ஷியம்மன் கோயிலைத்தான் எத்தனை அழகுடன் புதுப்பித்துள்ளார்கள்!

''கல்பாக்கத்தில் பணியாற்றும் உயர் மட்ட விஞ்ஞானிகள் பலரும் டாக்டர் பாபாவினால் உருவாக்கப் பெற்றவர்கள். அணுசக்தி கமிஷனின் இன்றையத் தலைவர் டாக்டர் சேத்னா அளிக்கும் ஊக்கமும் உற்சாகமும் இவர்களது சாதனைகளைப் பெரிதும் வளர்க்க உதவுகின்றன'' என்றார் திரு சிவா.

''கல்பாக்கம் உலைகள் எப்போது இயங்க ஆரம்பிக்கும்? இந்தத் திட்டத்துக்கான செலவு என்ன?'' என்ற முக்கியமான கேள்வியைக் கேட்டேன்.

''சுமார் 150 கோடி ரூபாய் திட்டத்தில் உருவாகி வருகிறது. 'சிவில்' வேலைகள் அநேகமாக முடிவடையும் தறுவாயில் உள்ளன. முதல் இந்திய முயற்சி என்ற வகையில் சில எதிர்பாராத தடங்கல்கள் ஏற்படாமல் இல்லை. 1977ம் ஆண்டு இது இயங்க வேண்டும் என்பதே குறிக்கோள். காலதாமதம் ஓரளவு இருந்தாலும், சுதேசித் திறன் வளர்ந்து பரிமளிக்க நாம் கொடுக்கும் நியாயமான விலை அது என்று சொல்லலாம், இல்லையா?'' என்று கேட்டார் திரு சிவா.

கல்பாக்கத்தில் இயங்கவிருக்கும் இரு உலைகளும் ஒவ்வொன்றும் 2,15,000 கிலோவாட் மின்சாரம் வழங்கும் என அறிந்தேன். எப்படியாவது தமிழ் நாட்டில் மின்வெட்டு தலைகாட்டாமலிருந்தால் சரி என்ற பிரார்த்தனையுடன் விடைபெற்றேன். — 'பாணன்'




★

இந்தியாவில் வந்து தங்கி நமது கலாச்சாரங்களை உணர முயலும் அமெரிக்கர்களுள் ஒருத்தியான மேரி, வீணை வாசிப்பதன் ஆரம்பப் பாடங்களை சுதாவிடம் கற்கிறாள்.

# கொசுக்களின் பிடுங்கல் தீருமா என்று தவித்தோம்...





# டார்ட்டாய்ஸ்

## கொசுவர்த்திச் சுருள்

(TORTOISE MOSQUITO COIL)

வாங்கினோமோ பிழைத்தோம்...

<u>சரிவர உபயோகித்தால் சிறந்த பயன்.</u>



பத்து சுருள்கள் அடங்கிய பெட்டியிலிருந்து ஓர் இரட்டைச் சுருளை எடுத்து ஒன்றின் வளைகொம்பு முனையை இரு விரல்களுக்கிடையே பிடித்துக் கொண்டு... மெல்லப் பிரித்தேன்.



கதவுகள் ஜன்னல்களை எல்லாம் மூடிய பின் சுருளை அதற்கான ஸ்டாண்டு ஒன்றின் மீது பொருத்தி, தரை மீது ஒரு மூலையில் வைத்துப் பற்ற வைத்தேன். 20 நிமிடங்கள் கழித்து இலேசான அதன் புகை பரவிய பின்—ஒரு ஜன்னல் கதவைத் திறந்தேன்-பறந்தோடின கொசுக்கள் வெளியே!



மலேரியா, ஃபைலேரியாக் காய்ச்சலைத் தடுக்கும் பொருட்டு சிபாரிசு செய்யப்படுகிறது இது—கொசுக்கடியே இனி இராது. ஆட்கள் நிரம்பிய ஓர் அறைக்கு ஒற்றைச் சுருளே போதும். 8 மணி நேரம் புகை பரப்பும். குழந்தைகளுக்குத் தீங்கற்றது.



இவ் வகையான சுருள்கள் ஜப்பான், ஹாங்காங், சிங்கப்பூர், கானடா நாடுகளில் பெயர் பெற்றுள்ளன. அதிசயமென்ன, நயமான விலையிலே—நல்ல பயன் தருபவை, இப்போதெல்லாம் கொசுத் தொல்லையே இல்லாமல் நிம்மதியாகத் தூங்குகிறோம்.

டார்ட்டாய்ஸ்-இந்தியாவிலே இதன் வகையில் ஒன்றே ஒன்றான கொசு விரட்டி



இன்று மேலும் பயன் தருமாறு மேம்படுத்தப் பட்டுள்ளது.



தயாரிப்பாளர்கள் :

**பாம்பே கெமிக்கல்ஸ் பிரை. லிட்.**

மானேக்ஜி வாடியா பில்டிங், 129, மகாத்மா காந்தி ரோடு, ஃபோர்ட், பம்பாய் 400001. போன் : 251970

*தமிழ்நாட்டுக்கு விநியோகஸ்தர்கள் :* everest/770/BCL-tm

**M/s. கே. ஏஸ். & சன்ஸ்,**

நெ. 1, விருபாக்ஷீஸ்வரர் கோவில் தெரு, மைலாப்பூர், சென்னை - 600 004 (தமிழ்நாடு)



# ஆன்மிக சாம்ராஜ்யத்துக்கு இன்னொரு யுவராஜர்!

**ந**வம்பர் 11-ந் தேதி சிருங்கேரி கிராமம் திருவிழாக் கோலம் பூண்டது. துங்கா நதிக் கரையில் சாந்தத்தில் மூழ்கியிருக்கும் அந்தச் சிற்றூரில் அன்று ராஜ கோலாகலம் கொழித்தது. ஆம், ஆன்மிக சாம்ராஜ்யத்துக்கு இன்னொரு யுவராஜர் உதயமாகப் போகிறார். வேதாந்த சக்கரவர்த்தியான ஆதிசங்கரர் தாம் நிறுவிய பல மடங்களில் மீண்டும் மீண்டும் தம் அருட் சக்தியைப் பல ஆசாரியார்கள் மூலம் தோற்றுவித்து வருவதன் தொடர்நிலையாக, வாழையடி வாழையாக இன்னொரு சங்கராச்சாரியார் அன்று உதிக்கப் போகிறார். இதைக் காணவே ஆயிரமாயிரம் மக்கள் சிருங்கேரியில் திரண்டிருக்கிறார்கள்.

அட்டைப்பட விளக்கம்

ஆந்திரப் பிரதேசம், குண்டூர் மாவட்டத்தில் உள்ள நரசராவ்பேட்டையைச் சேர்ந்த பிரம்மஸ்ரீ வேங்கடேசுவர அவதானி—ஸ்ரீமதி அனந்தலக்ஷ்மம்மா என்ற உத்தம தம்பதியரே ஆதிசங்கரரின் இன்னொரு வாரிசாக வரவிருக்கும் திருக்குமாரரை ஈன்றெடுத்து வளர்த்த பாக்கியசாலிகள். அவர்களின் அருமந்தப் புதல்வராகிய சீதாராம ஆஞ்சநேயலு சிறு பிராயத்திலிருந்தே தெய்விகத்திலும், வைதிகத்திலும் ஆழ்ந்த நாட்டம் கொண்டிருந்தார். ஒன்பதாண்டுகளுக்குமுன் தமது பதினாலாம் பிராயத்தில் சிருங்கேரி ஜகத்குரு ஸ்ரீ அபிநவ வித்யா தீர்த்த ஸ்வாமிகளின் திருக்கண் நோக்கத்துக்குப் பாத்திரமானார். சீடரின் உள்ளார்ந்த பெருமையைக் கண்டுகொண்ட ஜகத்குரு அவருக்கு அன்றிலிருந்து அத்யாத்ம வித்யைகளில் அப்பியாசத்தைத் தொடங்கி வைத்தார். வேத வேதாந்தம், தர்ம சாஸ்திரங்கள் இவற்றோடு பாரத தேசத்தின் பன்மொழிகளிலும் பயிற்சி பெற்றார் இளைஞர் சீதாராம ஆஞ்சநேயலு.

சிருங்ககிரி ஸ்ரீ சாரதா பீடமாகிய பரம புனிதமான ஸ்ரீ சங்கர மடத்தின் அடுத்த ஆசாரியப் பெருமானாக இவ்விளைஞரை நியமிக்குமாறு பீடத்தின் அதிஷ்டான தெய்வமாம் ஸ்ரீ சாரதாம்பிகையே தமக்கு ஆக்ஞாபித்ததாக ஸ்ரீ சிருங்கேரி பெரியவர்கள் கூறுகிறார்கள். இதன்படியே அவர்கள் இந்த நவம்பர் 12ந் தேதி ஸ்ரீ சீதாராம ஆஞ்சநேயலுவுக்குத் துறவு தந்து, தமது பிரதம சீடராகவும், வாரிசாகவும் ஸ்வீகாரம் செய்து கொண்டு, சிருங்ககிரி ஸ்ரீ சாரதா பீடத்தின் முப்பத்தியாறுவது ஆசாரியார்களான "ஸ்ரீ

- அட்டைப் படம்: ஸ்ரீ சாரதாம்பிகையும் ஸ்ரீ சங்கர மடத்தின் அடுத்த ஆசாரியப் பெருமானை ஆசிர்வதிக்கும் ஸ்ரீ சிருங்கேரி பெரியவர்களும்.

மேலே: பெரியவர்களின் ஸ்ரீ சாரதா பூஜை.

கீழே: பெற்றோர்களுடன் சீதாராம ஆஞ்சநேயலு.

- துங்காநதியில் நீராடி பெரியவரைப் பக்தியுடன் அணுகுகிறார் இளைஞர்.









○ ஜன்ம நட்சத்திர விழாவை யொட்டி ஜகத்குருவால் பட்டம் வழங்கி கௌரவிக்கப்பட்ட ஸ்ரீமதி நாராயணி அம்மாளும் அன்னாரது கணவர் ஸ்ரீ வைத்திய சுப்பிரமணிய அய்யரும்.
○ பட்டம் பெற்ற மற்றொரு பாக்கியசாலி ராமசுப்பிரமணிய ராஜா.

பாரதி தீர்த்த ஸ்வாமிகளாக'' அவரைப் பரிணமிக்கச் செய்திருக்கிறார்கள்.

துங்கா நதியில் நீராடி இளைஞர் முப்புரி நூலை அகற்றி, காஷாயமணிந்து, குருநாதரிடமிருந்து கமண்டலம் பெற்ற காட்சி கூடியிருந்த பல்லாயிரம் மக்களையும் உருகச் செய்தது. பெற்றோரும் சகோதரரும் தாங்கவொண்ணாதபடி அவ்வேளை உள்ளக் குமுறல் வெடித்து வெளிவந்து விட்டது. அந்தத் தியாகத்திலிருந்து ஸ்ரீ சாரதாம்பிகையின் கிருபையில் ஆன்மிக உலகுக்கே ஒரு மகிழ்ச்சிகரமான அத்தியாயம் தொடங்கும் என நம்புகிறோம்.

மாலையில் ஸ்ரீ ஜகத்குரு, 23 பிராய இளவல் பாரதி தீர்த்தர், மற்றும் பல பெருமக்கள் உரைகள் ஆற்றினர். இரவில் ஸ்ரீ சிருங்கேரி பெரியவர்கள் தங்கப் பல்லக்கிலும், புதிய ஸ்வாமிகள் வெள்ளிப் பல்லக்கிலும் ஆரோகணித்து வீதி உலா வந்தது பெரு வைபவமாக நிகழ்ந்தேறியது. ஸ்ரீமடத்தில் விசேஷ ஆராதனைகள் நடைபெற்றன.

இப்புனித நிகழ்ச்சியே ஸ்ரீ அபிநவ வித்யா தீர்த்த ஸ்வாமிகளின் ஐம்பத்தெட்டாவது ஜன்ம நட்சத்திர விழாவாகவும் அமைந்தது. இவ்விழாவில் ஜகத்குரு பலருக்குப் பரிசில் வழங்கி ஆசீர்வதித்தார்கள். தர்ம சிரேஷ்டர் ஸ்ரீ வைத்ய சுப்பிரமணிய அய்யரவர்களின் சகதர்மிணியான ஸ்ரீமதி நாராயணி அம்மாளுக்கு ''சாரதா பக்தமணி'' என்ற பட்டமும் ராஜபாளையம் கொடைவள்ளல் ஸ்ரீ ராமசுப்பிரமணிய ராஜாவுக்கு ''குரு பக்த மணி'' என்ற பட்டமும் வழங்கப்பட்டது மகிழ்தற்குரிய அம்சம். ஸ்ரீ சிருங்ககிரி ஆசாரியர்களுக்கும், அவர்களது பிறந்த நாள் பரிசிலாக உலகுக்கே கிடைத்துள்ள புதிய வாரிசுக்கும் நமது அஞ்சலிகளை அளிக்கிறோம். இவ்விரு பெரியவர்களும் நெடுங்காலம் ஆன்மிக உலகில் ஒளி கூட்டி, எல்லா வகையான பகைகளும், பேதங்களும் மறைவதற்கு வழிகாட்ட ஸ்ரீ சாரதா சந்திர மௌளீசுவரரின் திருவருளைப் பிரார்த்திக்கிறோம்.

# படித்துப் பாருங்கள்

## ஆக்ஸ்போர்டு சித்திர தேசப் படப் புத்தகம்

**பா**ரத நாடு ஆங்கிலேயர்களிடம் அடிமைப்பட்டிருந்த காலத்தில் பள்ளிக்கூடங்களுக்குத் தேவைப்படும் தேசப் படப் புத்தகத்தில் (Atlas) இரண்டொரு பக்கங்கள் தான் இந்தியாவுக்காக ஒதுக்கப்பட்டிருக்கும். அந்த நிலை இப்போது மாறி நம் நாட்டைப் பற்றி அதிசயமான விவரங்களோடு தேசப் படப் புத்தகங்கள் வர ஆரம்பித்திருக்கின்றன. அதுவும் குறிப்பாகத் தமிழ்நாட்டுக்காகவென்றே தமிழிலேயே ஒரு தேசப் படப் புத்தகத்தைத் தயாரித்திருக்கிறார்கள், பிரபல ஆக்ஸ்போர்டு சர்வகலாசாலை அச்சகத்தார். ஆரம்ப, நடுநிலைப் பள்ளிகளுக்குத் தேவையான எல்லாத் தகவல்களையும் பளிச்சென்ற எழுத்துக்களிலும், வண்ணங்களிலும் தயாரித்திருக்கிறார்கள். இந்தப் புதிய முயற்சி மாணவர்களிடையே நல்ல வரவேற்புப் பெறும்.

தேசப் படங்களை மட்டும் தராமல் பொது அறிவுக்கு உகந்த நூற்றுக்கும் மேற்பட்ட வண்ணப் படங்களும் குறிப்புக்களும் சேர்த்திருப்பது இந்தத் தேசப் படப் புத்தகத்துக்கு மெருகூட்டி இருக்கிறது. மிக உயர்தரமான முறையில் அச்சிடப்பட்டுள்ளது.

தயாரிப்பாளர்: ஆக்ஸ்போர்டு யுனிவர்சிடி பிரஸ் நிறுவனத்தார், அண்ணா சாலை, த. பெ. எண் 1079, சென்னை–600006 விலை ரூ. 4.00.

## கலைக் களஞ்சியம் - ஏழாம் தொகுதி

**சோ**டா குடிக்கிறீர்களே இதை முதன் முதலில் கண்டு பிடித்துத் தயாரித்தவர் யார் தெரியுமா? ஜோஸப் பிரீஸ்ட்லி என்பவர், இங்கிலாந்து நாட்டைச் சேர்ந்தவர்.

புத்தமைப்பு என்றால் தெரியுமா உங்களுக்கு? இன்வென்ஷன் (புதியவற்றைக் கண்டுபிடித்தல்) என்ற ஆங்கில வார்த்தையின் தூய தமிழ்தான் இது. இப்படி பி முதல் ம வரை (மலை ஏற்றம்) அகர வரிசைச் செய்திகளைக் கொண்டுள்ள கலைக் களஞ்சியத்தின் ஏழாவது தொகுதியை தமிழ் வளர்ச்சிக் கழகத்தினர் வெளியிட்டிருக்கிறார்கள். இதுவரையில் வெளிவந்துள்ள ஆறு தொகுதிகளின் தரத்துக்கு இணைய இதிலும் எடுத்துக் கொண்டிருக்கும் விஷயங்களைச் சுருக்கமாகவும் தெளிவாகவும் விளக்கி யிருக்கிறார்கள். ஏராளமான வண்ணப் படங்களும் விளக்கப் படங்களும் தொகுதிக்கு அழகு சேர்த்திருக்கின்றன. பூகோளம், புவி இயல், பௌதிகம், பொருளாதாரம், புள்ளியியல், மருத்துவம் பற்றிய கட்டுரைகளும் வாழ்க்கை வரலாறுகளும் சுவைபட எழுதப்பட்டிருக்கின்றன. கலைக் களஞ்சியத்தின் எல்லாத் தொகுதிகளும் வெளிவந்து முழுமை பெறும்போது குழந்தைகளின் அறிவு வளர்ச்சிக்கு உற்ற துணைவனாக விளங்கும் என்பதில் சந்தேகமே இல்லை.

வெளியிடுவோர்: தமிழ் வளர்ச்சிக் கழகம்; விற்பனை உரிமை: ஓரியண்ட் லாங்மன், சென்னை-2. விலை ரூ. 10/-

# சிவகாமியின் சபதம்

அமரர் **கல்கி**

இருபத்தொன்பதாம் அத்தியாயம்

## காற்றும் நின்றது!

**ம**றுநாள் அதிகாலையில் நமசிவாய வைத்தியரிடமும் அவருடைய குடும்பத்தாரிடமும் விடைபெற்றுக் கொண்டு மாமல்லரும் பரஞ்சோதியும் புறப்பட்டார்கள். பாண்டிய சைனியத்தை முறியடித்துச் சின்னபின்னமாக்கித் துரத்தி அடித்த வீரபல்லவ சைனியம் கொள்ளிட நதியைக் கடந்து அக்கரையில் ஆயத்தமாயிருந்தது. அதிர்ஷ்டவசமாக நதியில் தண்ணீர் குறைவாயிருந்தபடியால் நதியைக் கடப்பது எளிதாயிருந்தது. மாமல்லரும் பரஞ்சோதியும், கொள்ளிடத்தைக் கடந்ததும் குதிரைப் படையை மட்டும் தங்களைத் தொடர்ந்து வரும்படியும், காலாட் படையைப் பின்னால் சாவகாசமாக வரும்படியும் கட்டளை இட்டுவிட்டு மேலே சென்றார்கள். சூரியன் அஸ்தமிக்கும் சமயத்தில் தென் பெண்ணைக் கரையை அடைந்தார்கள்.

அன்றையதினம் வழிப் பிரயாணத்தின் போது மாமல்லர் அவ்வளவு குதூகலமாயில்லை. அவர் உள்ளம் கவலை கொண்ட சிந்தனையில் ஆழ்ந்திருந்ததை அவரது முகக் குறி காட்டியது.

**க**வலைக்கும் சிந்தனைக்கும் தக்க காரணம் இருந்தது. முதல் நாள் மாலை மாமல்லர் திருநாவுக்கரசரைத் தரிசிக்கச் சென்றிருந்தபோது அந்தப் பெருந்தகையார் எல்லையற்ற அன்புடன் மாமல்லருக்கு ஆசிகூறினார். பாண்டியனைப் புறங்கண்டது பற்றி வாழ்த்தினார். வாதாபிச் சக்கர





வர்த்திசண்டையை நிறுத்திச் சமாதானத்தைக் கோரியது பற்றியும் தமது மகிழ்ச்சியைத் தெரிவித்தார். மாமல்லரின் வேண்டுகோளின்படி காஞ்சிக்குக் கூடிய சீக்கிரத்தில் திரும்பி வருவதாகவும் வாக்களித்தார்.

அப்போது காஞ்சி மடத்தில் கடைசியாக மாமல்லரைப் பார்த்த சம்பவம் நாவுக்கரசருக்கு நினைவு வந்தது.

''பல்லவ குமாரா ! ஆயனர் சுகமாயிருக்கிறாரா? அவருடைய மகள் சிவகாமி சௌக்கியமா? அன்றைக்கு மடத்தில், 'முன்னம் அவனுடைய நாமம் கேட்டாள்' என்ற பாடலுக்கு அந்தப் பெண் அபிநயம் பிடித்த காட்சி அப்படியே என் மனக் கண் முன்னால் நிற்கிறது. முடிவில் உணர்ச்சி மிகுதியால் மூர்ச்சித்தல்லவா விழுந்து விட்டாள்? தந்தையும் மகளும் சௌக்கியமா யிருக்கிறார்களா ?''

இவ்விதம் சுவாமிகள் கேட்டுக்கொண் டிருந்தபோது மாமல்லருக்கும் ஏதேதோ பழைய ஞாபகங்கள் வந்தன. சிறிது தயக்கத்துடன், ''காஞ்சி முற்றுகைக்கு முன்னால் அவர்களை நான் பார்த்ததுதான். வராக நதிக்கரையில் மண்டபப்பட்டுக் கிராமத்தில் இருக்கிறார்கள். போகும் போது அவர்களைப் பார்க்க எண்ணியிருக்கிறேன்'' என்றார்.

அதைக் கேட்ட நாவுக்கரசர், ''அப்படியா? மண்டபப்பட்டு வெகு அழகான கிராமம். அவர்களைப் பார்த்தால் நான் ரொம்பவும் விசாரித்ததாகச் சொல்ல வேணும். அந்தப் பெண் சிவகாமியை நினைத்தால் என் மனம் ஏனோ உருகுகிறது. பல்லவகுமாரா! ஆயனரிடம் அப்போதே சொன்னேன். சிவகாமியை அன்றைக்குப் பார்த்தபோது, ஏதனாலோ 'இந்தப் பெண்ணுக்கு ஒன்றும் நேராமல் இருக்க வேண்டுமே!' என்ற கவலை எனக்கு உண்டாயிற்று. ஏகாம்பர நாதர் கருணை புரிய வேண்டும்'' என்றார்.

மேற்கூறிய மொழிகள் மாமல்லருடைய உள்ளத்தில் பதிந்து அவருடைய உற்சாகத்தை யெல்லாம் போக்கடித்து விட்டன. ''சிவகாமிக்கு ஒன்

னும் நேராமலிருக்க வேண்டுமே'' என்பதை ஒரு மந்திரம் போல் அவருடைய மனம் ஜபித்துக் கொண்டிருந்தது. அந்த நிமிஷமே சிவகாமியைப் பார்க்க வேண்டும் என்ற அபரிமிதமான ஆசை அவருடைய இருதயத்தின் அந்தரங்கத்திலிருந்து பொங்கி எழுந்து அவருடைய உடம்பின் ஒவ்வோர் அணுத்துவாரம் வழியாகவும் வெளியே வியாபித்தது. அவருடன் கிளம்பிய குதிரைப் படை வெகுதூரம் பின்தங்கும்படியாகத் தம் குதிரையை அவர் எவ்வளவோ வேகமாகச் செலுத்திக் கொண்டு போன போதிலும் அந்த வேகம்கூட அவருக்குப் போதவில்லை.



''பிரபு! குதிரையைக் கொன்றுவிடுவதாக உத்தேசமா?'' என்று பல தடவை பரஞ்சோதி எச்சரிக்கை செய்து அவரை நிறுத்த வேண்டியதாயிருந்தது.

இரண்டு நாட்கள் முன்னதாகவே மண்டபப்பட்டுக்கு அவர் அனுப்பியிருந்த கண்ணபிரான் எதிரே வந்து ஏன் செய்தி சொல்லக் கூடாது என்று அடிக்கடி எண்ணமிட்டார்.

இந்த எண்ணம் அவர் தென் பெண்ணையைத் தாண்டிச் சிறிது தூரம் போனதும் நிறைவேறியது. கண்ணபிரான் ரதத்தை வேகமாக ஓட்டிக் கொண்டு எதிரே வந்தான். ஒருகணம் ரதத்தில் வேறு யாராவது இருப்பார்களோ என்று ஆவலுடன் மாமல்லர் பார்த்தார். உடனே, அவ்விதம் எதிர் பார்ப்பதற்கு எவ்வித நியாயமும் இல்லை என்று தாமே சமாதானம் செய்து கொண்டார்.

கண்ணபிரான் கொண்டுவந்த செய்தி மாமல்லருக்கு முதலில் ஏமாற்றத்தை அளித்தது. பிறகு, அதுவே ஓரளவு ஆறுதலையும் மனச்சாந்தியையும் அளித்தது.

அந்தச் செய்தியாவது, மகேந்திர பல்லவர் இரண்டு வாரங்களுக்கு முன்பே தூதர்களை அனுப்பி ஆயனரையும் சிவகாமியையும் காஞ்சிக்கு வரவழைத்துக் கொண்டார் என்பதுதான்.

இதனால் தாம் போகிற வழியில் சிவகாமியைப் பார்க்க முடியாமலிருப்பது உண்மையே. அதனால் என்ன? காஞ்சியில் அவர்கள் பத்திரமாயிருப்பார்கள் அல்லவா ?

யுத்தம் முடிந்ததும் முதல் காரியமாக மகேந்திர பல்லவர் ஆயனரையும் சிவகாமியையும் நினைவுகூர்ந்து அவர்களைக் காஞ்சிக்குத் தருவித்துக் கொண்டது மாமல்லருக்கு மிக்க திருப்தியை அளித்தது. இதிலிருந்து பல ஆகாசக் கோட்டைகளைக் கட்டத் தொடங்கினார். எதற்காக அவர்களை அவ்வளவு அவசரமாக மகேந்திர பல்லவர் காஞ்சிக்கு வருவித்துக் கொண்டார்? எதற்காகத் தம்மையும் பாண்டிய சைனியத்தைத் தொடர்ந்து போகாமல் திரும்பி வரும்படி கட்டளையிட்டிருக்கிறார் ?

ஒருவேளை தமது மனோரதத்தை அறிந்து விரைவிலேயே விவாகத்தை நிறைவேற்றிவிடலாம் என்ற எண்ணமாயிருக்குமோ ?

இத்தகைய பற்பல மனோராஜ்யங்களிலும், அவற்றைக் குறித்துத் தளபதி பரஞ்சோதியிடம் பேசுவதிலுமாக மாமல்லருக்கு அன்றிரவு நேரம் வராக நதிக் கரையில் சென்றது. இதற்குள் பின்தங்கிய குதிரைப் படையும் வந்து சேர்ந்தது.

மறுநாள் அதிகாலையில் எல்லோருமாகக் காஞ்சியை நோக்கிக் கிளம்பினார்கள். அன்றிரவே காஞ்சியை அடைந்துவிடலாம் என்ற எண்ணத்தினால் எல்லோருக்குமே பரபரப்பு அதிகமாக இருந்தது.

**வ**ராக நதியிலிருந்து ஒரு காத தூரம் போனவுடன், எதிரே இரண்டு குதிரை வீரர்கள் வருவதைப் பார்த்த



தும் எல்லோருடைய பரபரப்பும் உச்ச நிலையை அடைந்தது. வருகிறவர்கள் காஞ்சியின் தூதர்களாகத்தான் இருக்க வேண்டும். என்ன செய்தி கொண்டு வருகிறார்கள் ?

அருகில் நெருங்கியதும் வந்தவர்கள் குதிரை மீதிருந்து குதித்திறங்கி மாமல்லருக்கு வணக்கம் செலுத்தினார்கள். ஒருவன் மாட்டுக் கொம்பில் வைத்துப் பத்திரமாய்க் கொண்டு வந்திருந்த ஓலையை, ''பிரபு! சக்கரவர்த்தியின் ஓலை!'' என்று கூறியவண்ணம் மாமல்லரிடம் கொடுத்தான். இன்னொருவன் தான் கொண்டு வந்திருந்த மற்றோர் ஓலையைப் பரஞ்சோதியிடம் கொடுத்தான்.

இருவரும் உடனே ஓலைகளைப் படிக்கத் தொடங்கினார்கள்.

அவர்கள் ஏறியிருந்த குதிரைகள் நின்றன.

ஓலைகளைக் கொண்டு வந்திருந்த தூதர்கள் நின்றார்கள்.

மாமல்லரைத் தொடர்ந்து வந்த வீரர்கள் நின்றார்கள்.

அவர்களுக்குக் கொஞ்ச தூரத்துக்குப் பின்னால் பெரும் புயலைப் போலப் புழுதிப் படலத்தைக் கிளப்பிக் கொண்டு வந்த பதினாயிரம் குதிரைப் படை வீரர்களும் நின்றார்கள்.

சற்று நேரம் காற்றுக்கூட வீசாமல் நின்றது.

மரக் கிளைகளும் இலைகளும் அசையாமல் நின்றன.

* * *

**ம**கேந்திர பல்லவரின் ஓலையின் முதல் சில வரிகளைப் படித்ததும் மாமல்லருக்குச் சந்தேகம் உண்டாயிற்று. ஓலையை முன்னும் பின்னும் புரட்டி அந்தரங்க அடையாளம் சரியாயிருக்கிறதா என்று பார்த்தார். தூதனையும் உற்றுப் பார்த்தார். சந்தேகமில்லை; உண்மையாகவே தந்தை எழுதிய ஓலைதான்.

உடம்பெல்லாம் படபடக்க, புருவங்கள் நெரிந்தேற, முகத்தில் முத்து முத்தாக வியர்வை துளிக்க, கண்கள் கலங்கிக் கண்ணீர் பெருகி அடிக்கடி எழுத்தை மறைக்க ஒருவாறு ஓலையை மாமல்லர் படித்து முடித்தார். ஓலையில் எழுதியிருந்ததாவது :

''அருமைப் புதல்வன் வீர மாமல்லனுக்குக் கர்வ பங்கம் அடைந்த தந்தை மகேந்திர வர்மன் கண்ணில் கண்ணீருடனும் மனத்தில் துயரத்துடனும் எழுதிக் கொண்டது :

''குழந்தாய்! என்னுடைய சாணக்கிய தந்திரமெல்லாம் கடைசியில் பயனற்றுப் போய்விட்டன. நான் ஏமாந்து விட்டேன். உன்னுடைய நேர்மையான யோசனையைக் கேட்காமல் போனதற்காக அளவற்ற துயரம் அடைந்திருக்கிறேன். மகனே ! அந்தப் பாதகப் புலிகேசி என்னை வஞ்சித்துவிட்டான். இரண்டு வாரங்கள் காஞ்சி அரண்மனையில் விருந்துண்டு நட்புரிமை கொண்டாடிச் சல்லாபம் செய்துவிட்டுப் போனவன் மகத்தான துரோகம் செய்துவிட்டான். தொண்டை மண்டலத்துக் கிராமங்களையும், பட்டணங்களையும் கொளுத்தவும், சிற்பங்களையெல்லாம் உடைக்கவும், குடிகளை இம்சிக்கவும் அந்த மூர்க்க ராட்சதன் கட்டளை இட்டிருக்கிறானாம். ஐயோ ! குமாரா ! எப்படி உன்னிடம் சொல்வேன்? பல்லவ இராஜ்யத்தின்

# இலவசம்

ஒவ்வொரு
175 கிராம் டின்னுடனும்
300 கிராம் சர்க்கரை




ஒவ்வொரு 50 கிராம்
ஜாடியுடனும்
ஒரு 95 கிராம்
பார்லே குளுகோ
பிஸ்கட் பாக்கெட்




**ரிக்கரி.**
இன்ஸ்டன்ட்
-விசேஷச் சுவை கொண்ட ஸ்பெஷல் காபி

இச்சலுகை,
சரக்குகள்
உள்ளவரை
மட்டுமே!

சிறந்த கலைச் செல்வம் பறிபோய் விட்டதோ என்றும் ஐயுறுகிறேன்.

''மாமல்லா! என்னை மன்னித்துவிடு! இதோ என்னுடைய தவறுகளுக்குப் பிராயச்சித்தம் செய்து கொள்ளப் புறப்படுகிறேன். மூர்க்க சளுக்க வீரர்களின் கொடுமைகளிலிருந்து நம் குடிகளைக் காப்பாற்றப் புறப்படுகிறேன். கோட்டையில் உள்ள சைனியங்களை அழைத்துக் கொண்டு கிளம்புகிறேன். சேனாபதி கலிப்பகையும் என்னுடன் வருகிறார்.

''குமாரா! காஞ்சி சுந்தரி பாது காப்பாரின்றி அநாதையாக இருக்கிறாள். நீயும் உன் தோழன் பரஞ்சோதியுந்தான் அவளைக் காப்பாற்ற வேண்டும். காஞ்சிக் கோட்டைக்கு நான் திரும்பி வருவேனா என்பது சந்தேகம். உன்னை உயிரோடு பார்ப்பேன் என்பது நிச்சயமில்லை. போர்க்களத்தில் எனக்கு வீர மரணம் கிடைத்தால், அதைக் காட்டிலும் நான் பெறக்கூடிய பேறு இனிமேல் வேறொன்றும் இல்லை.

''மகனே! நான் செய்த துரோகத்தை மன்னித்து மறந்துவிடு! என்னையும் அடியோடு மறந்துவிடு! ஆனால், அறுநூறு ஆண்டுகளாக வாழையடி வாழையாய் வந்த பல்லவ வம்சத்துக்கு இனிமேல் உன்னைத் தவிர வேறு கதியில்லை என்பதை மட்டும் மறந்துவிடாதே!''

மாமல்லர் மேற்படி ஓலையைப் படித்து முடிப்பதற்கு வெகுநேரத்துக்கு முன்னாலேயே தளபதி பரஞ்சோதி தமக்கு வந்த ஓலையைப் படித்துவிட்டார். அது மாமல்லருக்கு வந்த ஓலையைப் போலன்றி மிகவும் சுருக்கமாயிருந்தது.

''அருமைப் பரஞ்சோதிக்கு,

''நீ என்னைப் பல தடவை 'நீங்கள் வாழ்க்கையில் தவறே செய்தது கிடையாதா?' என்று கேட்டதுண்டு. நானும் அகம்பாவத்துடன் 'கிடையாது' என்று சொல்லி வந்தேன். இப்போது என் வாழ்க்கையில் மகா பயங்கரமான தவற்றைச் செய்துவிட்டேன். இராஜதந்திரத்தினால் சத்துருவை நண்பனாகச் செய்து கொள்ளப் பார்த்தேன். நேர் மாறான பலன் கிடைத்தது. அந்தத் தவற்றுக்குப் பிராயச்சித்தம் செய்வதற்காக இதோ போர்க்களத்துக்குப் புறப்படுகிறேன்.

''இச்சமயம் என் பக்கத்தில் நீ இல்லையே என்று வருத்தமாயிருக்கிறது. ஆனாலும் மாமல்லன் அருகில் இச்சமயம் நீ இருப்பதுதான் அதிக அவசியமானது.

''நான் பல தடவையும் உன்னிடம் சொல்லியிருப்பதை மறந்துவிடாதே. பல்லவ வம்சம் சந்ததியின்றி நசித்துப் போகக் கூடாது. மாமல்லனை உன்னிடம் ஒப்படைக்கிறேன்.''

* * *

மாமல்லர் ஓலையை இரண்டு மூன்று தடவை படித்த பிறகு பரஞ்சோதியிடம் ஏதோ சொல்ல முயன்றார். ஆனால், வார்த்தைகள் வரவில்லை. எனவே, ஓலையைச் சிநேகிதரின் கையில் கொடுத்தார்.

பரஞ்சோதி அதிக விரைவிலேயே படித்து முடித்துவிட்டு, ''ஐயா! நான் குதிரைப் படையுடன் முன்னதாகப் போகிறேன். தாங்கள் இங்கேயே தங்கிப் பின்னால் வரும் காலாட் படையையும் அழைத்துக் கொண்டு வந்து சேருங்கள்!'' என்றார்.

''நல்ல காரியம், தளபதி! என் உடம்பு இங்கே இருக்கிறதே தவிர, என் உயிர் ஏற்கனவே என் தந்தைக்கருகில் போய்விட்டது. இனிமேல் வழியில் தங்குவது என்பது கிடையாது. காலாட் படை வருகிறபடி வரட்டும். குதிரைப் படையுடன் நாம் முன்னதாகப் போக வேண்டியதுதான்'' என்றார் மாமல்லர்.

சற்று நேரத்துக்கெல்லாம் அந்தப் பிரதேசமானது நாலு கால் பாய்ச்சலில் சென்ற ஆயிரக்கணக்கான குதிரைகளின் காலடியினால் அதிர்ந்தது. கண்ணுக்கெட்டிய தூரம் ஒரே புழுதிப் படலமாயிற்று.

## முப்பதாம் அத்தியாயம்

# ''சிவகாமி எங்கே?''

ஆயனர் தமது பழைய சிற்ப வீட்டை அடைந்ததிலிருந்து நரக வேதனை அநுபவித்துக் கொண்டிருந்தார்.

மலையிலிருந்து விழுந்ததனால் முறிந்து போயிருந்த அவருடைய வலது கால் சொல்ல முடியாத வலியையும் வேதனையையும் அவருக்குத் தந்து கொண்டிருந்தது.

சிவகாமியை இழந்ததினால் அவருடைய உள்ளம் அளவில்லாத் துன்பத்தை அநுபவித்துக் கொண்டிருந்தது.

மண்டபப்பட்டிலிருந்து ஆயனரும் சிவகாமியும் சக்கரவர்த்தி அனுப்பிய பல்லக்கில் அவசரமாகக் கிளம்பியபோது ஆயனரின் சகோதரியைப் பின்னால் சாவகாசமாக வண்டியில் வந்து சேரும்படி சொல்லியிருந்தார்கள். அதன்

படியே அந்த அம்மாள் முக்கியமான வீட்டுப் பொருள்களுடன் ரதியையும் சுகரையும் வண்டியில் ஏற்றிக்கொண்டு பழைய அரண்ய வீட்டுக்கு வந்து சேர்ந்திருந்தாள். அந்த அம்மாள் அவ்விதம் முன்னாடியே வந்து சேர்ந்திருந்தபடியாலேயே ஆயனர் இன்னும் உயிரோடு இருப்பது சாத்தியமாயிற்று.

அவருக்கு வேண்டிய சிகிச்சைகளையும் சிசுருஷைகளையும் அந்த அம்மாள் மிக்க பக்தி சிரத்தையோடு செய்து அவரை உயிர் பிழைக்கப் பண்ணியிருந்தாள்.

ஆனாலும் அவள் அடிக்கடி கேட்டு வந்த ஒரு கேள்வியானது புண்ணிலே கோலெடுத்துக் குத்துவது போல் அவருடைய இருதயத்தை நோகச் செய்து கொண்டிருந்தது.

அந்தக் கேள்வி, ''சிவகாமி எங்கே?'' என்பதுதான்.

சோகக் கடலில் ஆழ்த்தும் மேற்படி கேள்வியை நிறுத்துவதற்காக ஆயனர் ஏதேதோ மறுமொழி சொல்லிப் பார்த்



தார். அவையொன்றும் சிவகாமியின் அத்தைக்குப் பிடிபடவே இல்லை. எனவே அவள் கேள்வி கேட்பதை நிறுத்தவில்லை.

இது போதாதென்று ரதியும் சுகரும் அடிக்கடி ஆயனரிடம் வந்து முகத்தைத் தூக்கிக் கொண்டு நின்று சப்தமற்ற குரலில் தங்களுடைய மௌனக் கேள்வியை அடிக்கடி கேட்டுக் கொண்டிருந்தார்கள். ஆயனர் கடுமையான குரலில் அதட்டி அவர்களை அப்பால் போகும்படி செய்வார்.

சுகப் பிரம்மரிஷி இப்போதெல்லாம் அதிகமாகத் தம் குரலை வெளியில் காட்டுவதில்லை. சில சமயம் திடீரென்று நினைத்துக் கொண்டு பலமான கூக்குரல் போடுவார். அப்போது அவருடைய தொனி, ''சிவகாமி எங்கே?'' என்று கேட்பது போலவே யிருக்கும்.

* * *

அரண்ய வீட்டுச் சுற்றுப் பக்கமெல்லாம் ஏதோ பெரிய அல்லோலகல்லோலம் நடந்து கொண்டிருந்ததாகத் தோன்றியது.

திடீர் திடீரென்று காட்டுக்குள்ளும் அப்பாலும் சமீபத்திலும் தூரத்திலும் பலர் கூச்சலிட்டுக் கொண்டு ஓடும் சப்தம் கேட்கும்; போர்முழக்கங்கள் கேட்கும்; அழுகையும் புலம்பலும் சில சமயம் கேட்கும். இரவு நேரங்களில் சுற்றுமுற்றும் பார்த்தால் திரள் திரளாகப் புகையும் நெருப்புச் சுவாலையும் எழுவது தெரியும்.

அந்த வனத்தில் வசித்த பட்சிகளிடையே என்றும் காணாத மௌனம் சில சமயம் நிலவியது. திடீரென்று பல்லாயிரம் பட்சிகள் ஏக காலத்தில் கூச்சலிடும் சப்தம் கேட்டது.

ஒரு நாள் அந்த அரண்யத்துக்கு வெகு சமீபத்தில் எங்கேயோ ஒரு பெருஞ் சண்டை நடக்கிறதென்பதற்கு அறிகுறிகள் தெரிந்தன.

போர் முரசங்களின் பேரொலியும் போர் வீரர்களின் ஜய கோஷமும், குதிரைகளும் மனிதர்களும் நடமாடும் சத்தமும், ஆயுதங்கள் மோதும் ஓசையும் இடைவிடாமல் கேட்டுக் கொண்டிருந்தன.

சாயங்காலம் திடீரென்று ஐந்தாறு வீரர்கள் மேலெல்லாம் இரத்தக் காயங்களுடன், ''தண்ணீர்! தண்ணீர்!'' என்று கூவிக் கொண்டு ஆயனர் வீட்டுக்குள் நுழைந்தார்கள். அவர்கள் பல்லவ வீரர்கள் தான் என்று தெரிந்து கொண்டதும், ஆயனர் தாம் படுத்திருந்த இடத்திலிருந்தே அவர்களை வரவேற்றுத் தம் அருகில் உட்காரச் சொல்லிச் சகோதரியைக் கொண்டு அவர்களுக்குத் தண்ணீரும் கொடுக்கச் செய்தார். பிறகு, அவர்கள் எங்கே எப்படிக் காயம் அடைந்தனர் என்பது பற்றி விசாரித்தார்.

''இதென்ன உங்களுக்கு ஒன்றுமே தெரியாதா?'' என்று அவ்வீரர்கள் வியப்புடன் கேட்டனர்.

ஆயனர் அவர்களுக்குத் தமது முறிந்த காலைச் சுட்டிக்காட்டினார்.

வந்த வீரர்கள் அந்தக் காலையும் சுற்றுமுற்றும் உடைந்து கிடந்த சிலைகளையும் பார்த்துவிட்டு, ''ஐயோ! சளுக்க ராட்சதர்கள் இந்த வீட்டுக்குள்ளும் புகுந்து இப்படியெல்லாம் அக்கிர

மங்கள் செய்துவிட்டார்களா ?'' என்று வருத்தப்பட்டார்கள்.

பிறகு அந்த வீரர்களில் ஒருவன், புலிகேசி காஞ்சியைவிட்டுப் போனதி லிருந்து அன்று மணிமங்கலத்துக்கருகில் நடந்த பயங்கரமான சண்டை வரையில் எல்லாம் விவரமாகச் சொன்னான். அவன் கூறியதன் சாராம்சமாவது :

புலிகேசி கோட்டையிலிருந்து வெளி யேறியதும் தன்னுடைய சைனியத்தைச் சிறு சிறு படைகளாகப் பிரித்துப் பல்லவ நாட்டுக் கிராமங்களைக் கொளுத்தவும், ஜனங்களை இம்சிக்கவும், சிற்பங்களை நாசமாக்கவும், சிற்பிகளை அங்கஹீனம் செய்யவும் கட்டளை இட்டு அனுப்பினார். இதை அறிந்த சக்கரவர்த்தி கோட்டைக் குள்ளிருந்த சொற்பப் படைகளுடன் வெளிக் கிளம்பினார். அன்று காலையில் மணிமங்கலம் என்னும் கிராமத்துக்கரு கில் புலிகேசியின் படைவீரரும் பல்லவ வீரர்களும் கைகலந்தார்கள். புலிகேசி யின் வீரர்கள் எண்ணிக்கையிலும் ஆயுத பலத்திலும் அதிகம் ஆன போதிலும் மகேந்திர சக்கரவர்த்தியே நேரில் தலைமை வகித்தபடியால் காஞ்சி வீரர்கள் பிரமாதமான வீரப் போர் நடத்தினார்கள். எதிர்ப் பக்கத்தில் வாதாபிச் சக்கரவர்த்தி புலிகேசியே தலைமை வகித்து நடத்தினார். இரு சக்கரவர்த்திகளும் போர்க்களத்தின் மத்தியில் நேருக்கு நேர் சந்தித்து வீர வாதம் செய்தபிறகு ஒருவரையொரு வர் தாக்கிக் கொண்டார்கள்.

பல்லவ சைனியம் ஏறக்குறைய தோல்வி அடைந்திருந்த நிலைமையில், சற்றுத் தூரத்தில் பெரிய குதிரைப் படை ஒன்று வரும் சத்தம் கேட்டது. ரிஷபக் கொடியைப் பார்த்ததும், ''இதோ மாமல்லர் வந்துவிட்டார் !'' என்ற கோஷம் கிளம்பியது. சற்று நேரத்துக் கெல்லாம் மாமல்லரின் குதிரைவீரர்கள் சளுக்கர் படை மேல் இடியைப் போல் விழுந்து தாக்கி னார்கள்.

சளுக்க வீரர்கள் ஓட ஆரம்பித் தார்கள். அரக்கன் புலிகேசியும் ஓடிப் போனான். ஆனால், போகும்போது தன் கையிலிருந்த சிறிய கத்தி ஒன்றை மகேந்திரர் மீது குறி பார்த்து எறிந்து விட்டான். மகேந்திரர் பிரக்ஞையிழந்து தரையில் விழுந்தார்.

வாதாபி வீரர்கள் போர்க்களத்தை விட்டு ஓடியபிறகு மாமல்லரும் பரஞ் சோதியும் மகேந்திர பல்லவர் விழுந் திருந்த இடத்துக்கு வந்தார்கள். அவ ருக்குத் தக்க சிகிச்சை செய்து காஞ்சிக் குப் பத்திரமாய் எடுத்துப் போகக் கட் டளை இட்டுவிட்டு, புறமுதுகிட்டு ஓடிய வாதாபி வீரர்களைப் பின் தொடர்ந்து சென்றார்கள்.

* * *

மேற்படி விவரங்களைக் கூறியபின் னர் காயமடைந்த பல்லவ வீரர்கள் காஞ்சியை நோக்கிச் சென்றார்கள்.

மகேந்திர பல்லவருக்கு மரண காயம் என்பதைக் கேட்டதில் ஆயனர் அளவற்ற துயரம் அடைந்தார். ஆனு லும் மாமல்லரும் பரஞ்சோதியும் சளுக்க வீரர்களைத் தொடர்ந்து போயிருக்கிறார்கள் என்னும் செய்தி அவருக்குச் சிறிது ஆறுதலை அளித்தது. அவர்கள் சிவகாமியைச் சிறை மீட்டுக் கொண்டு வந்துவிடுவார்கள் என்ற நம் பிக்கை அவருடைய உள்ளத்தில் உதயமா யிருந்தது.

* * *

மணிமங்கலம் சண்டை நடந்து ஒரு வாரம் ஆகிவிட்டது. ஆயனர் தினந் தோறும் ஏதேனும் நல்ல சேதி வராதா என்று ஆவலுடன் காத்திருந்தார். வாச லில் ஏதேனும் சத்தம் கேட்டால் அவர் திடுக்கிடுவார். யாரோ செய்தியுடன் வருகிறார்கள் என்று பரபரப்புடன் எழுந்து உட்காருவார்.

இம்மாதிரி எத்தனையோ தடவை ஏமாற்றம் அடைந்தபிறகு கடைசியில் உண்மையாகவே இரண்டு குதிரைகள் அவர் வீட்டை நெருங்கி வரும் சத்தம் கேட்டது. வந்த குதிரைகள் வீட்டு வாசலில் நின்றன என்பது தெரிந்தது.

வாசற்படி வழியாக நுழைந்து வரப்போகிறவர்கள் யார் என்று கொட் டாத கண்களுடனும் துடிதுடித்த நெஞ் சுடனும் ஆயனர் பார்த்துக்கொண்டிருந் தார். அவருடைய ஆசை வீண் போக வில்லை. ஆம் ! மாமல்லரும் பரஞ் சோதியும்தான் உள்ளே வந்தார்கள்.

அவர்களைப் பார்த்ததும் முதலிலே ஆயனருடைய முகத்தில் மகிழ்ச்சிக் களை படர்ந்தது. ஆனால், அவர்கள் நெருங்கி வர வர மகிழ்ச்சி குன்றியது.

மாமல்லரின் முகத்தில் தோன்றிய கேள்விக் குறியானது ஆயனருடைய உள்ளத்தில் சகிக்க முடியாத வேதனையை உண்டாக்கிற்று.

மாமல்லர் வாய் திறந்து கேட்ப தற்கு முன்னால் அவர் கேட்கப் போகும் கேள்வியைத் தாமே கேட்டுவிடத் தீர் மானித்தார் ஆயனர்.

அந்தச் சிற்ப மண்டபமும் வெளியி லிருந்த அரண்யமும் பிரதித்வனி செய் யும்படியான சோகம் நிறைந்த குரலில், ''பிரபு! என் சிவகாமி எங்கே ?'' என்று அலறினார். (தொடரும்)

# மயிலாத்தா

பொழுதுக்கதை

இடைப்பாடி கமலக்கண்ணன்

''ஏட்டையா!''

அடிவயிற்றிலிருந்து எம்பிக் கொண்டு மேலெழுந்தது அவள் குரல்.

மேசையின் முன் குனிந்து ஏதோ எழுதிக்கொண்டிருந்த ஏட்டையா, குரல் கேட்டதும் நிமிர்ந்து பார்த்தார். அவள் காட்சியளித்த கோலத்தைக் கண்டதும் பதறிப்போய் எழுந்தார். பேச்சொலி கேட்டு உள் அறையிலிருந்த காவலர்கள் முன்னறையில் குழுமினர்.

''என்ன நடந்தது புள்ளே? இதேன் இந்தக் கூத்து?''

''எல்லாம் முடிஞ்சுபோச்சு ஏட்டையா. என்னைத் தொட்ட அந்த மிருகம், நாட்டாமை — அவனைக் குத்திக் கொதறிப் போட்டேன்!'' அவள் குரல் தெளிவாக ஒலித்தது. வலது கையில் பிடித்திருந்த கத்தியை உயர்த்திக் காட்டிவிட்டு, அதை மேசையின் மேல் போட்டாள். இரத்தத்தின் சரப்பசை அந்தக் கத்தியில் உலராமலிருந்தது.

''வள்ளியூர் நாட்டாமையா? அவரு என்ன செய்தாரு? எங்கே எப்போ — இது ஏன் நடந்தது?'' — ஏட்டையாவின் விறைப்பான தொழில் முறை விசாரணை தொடர்ந்தது.

''ஏட்டையா, கொஞ்சம் முன்ன பெரியபண்ணை களத்துமேட்டுச் சாலைக்குள்ளே — அங்கே ஒருத்தருமே இல்லே. அந்த மிருகத்துக்கிட்டே நான் தன்னந்தனியே மாட்டிக் கிட்டேன். அது கத்தியைக் காட்டி மிரட்டி, என் மானத்தை வாங்கப் பாத்துது. நானும் என்னாலே முடிஞ்சவரைக்கும் தடுத்து ஓடியாடிப் பாத்தேன். என் மானத்தைக் காப்பாத்திக்க வேறே வழி தெம்படலே. அந்தக் கத்தியையே புடுங்கி, அந்த நாயைத் தீர்த்துட்டு நேரே இங்கே ஓடியாறேன். இதான் நடந்தது'' என்று சொல்லி முடிக்கு முன்னால் அவள் மானம் தாளாமல் ஓவென்று கதறிஅழுதாள்.

''ஆளுக்கு என்ன ஆச்சி புள்ளே?''

''ஆள் அப்பவே, அதே எடத்துலே முடிஞ்சி போயிட்டான்.''

ஏட்டையா தொலைபேசியை எடுத்து ஏதோ பேசிவிட்டுத் தொடர்ந்தார்:

''இந்தப் புள்ளையை உள்ளே லாக்கப்பிலே வையப்பா. நான் எஸ். ஐ.க்குப் போனிலே சொல்லிட்டேன். நாங்க இப்போ உடனே 'ஸ்பாட்டு'க்குப் போறோம். ஐயா வந்தா நேரே அங்கே வரச்சொல்லுங்க. நீங்க ரெண்டு பேர் மட்டும் இங்கே இருங்க. மத்தவங்க என்னோட புறப்பட்டு வாங்க சீக்கிரம்.''

ஏட்டையாவும் நான்கு காவலர்களும் உடனே அந்த முன்னிரவில் வள்ளியூருக்குப்பறந்தனர். காவலில் வைக்கப்பட்ட மயிலாத்தாளுக்கு அன்று காலை முதல், மாலைக்குள் நடந்து முடிந்து விட்டசெயல்கள் நெஞ்சில் அடித்துப் புரண்டுகொண்டு மேலெழும்பின.

வள்ளியூரிலிருந்து பிரிந்து நீண்டு நெளிந்து ஆவணியூர் செல்லும் அந்தப் பாதையோரத்தில் மயிலாத்தாளின் வரவுக்காகக் காத்திருந்தான் ரங்கன்.

ரங்கன் — ரௌடி ரங்கன் — மயிலாத்தாளின் தாய் மாமன். அவள் சிறுமியாய் இருக்கும் போதே அவளைப் பெற்றவர்கள் மண்டையைப் போட்டு விட்டார்கள். இந்த உலகில் இப்போது அவளுக்குப் பாட்டிதான் எல்லாம். இவனும் ஏதோ இருக்கிறான், உறவு என்று சொல்லிக் கொள்ள. அவள் கழுத்தில் தாலி கட்ட வேண்டும் என்ற தணியாத ஆசை அவனுக்கு.

ரங்கனுக்குத்தொழில், ரௌடிப் பட்டம் வாங்கித் தந்த பட்டை சரக்குத் தயாரிப்புத்தான்.

மயிலாத்தாள் எப்போதும் வழக்கமாகக் கூலிக்குப் போகும் நேரம் ஆகியும் ஏன் இன்னும் அவளைக் காணோம்? அவளைப் பார்த்து ஒரு வாரத்துக்கு மேல் ஆகிவிட்டது. இன்று எப்படியும் அவளைப் பார்த்து, அவள் முடிவைத் தெரிந்து கொண்டு போவது என்ற உறுதியோடு காத்திருந்தான் ரங்கன்.

கையில் தூக்குச் சட்டியோடு மயிலாத்தா அவனைக் கவனியாது சென்றாள்.

''பாட்டிக்கு உடம்பு தேவலையா மயிலு? கொணமாயிட்டு வருதா?''

''ஐயே, நலம் பொலம் விசாரிக்கிற எடத்தெப் பாரு. பாட்டிக்குத் தேவலாம். ஆனா இன்னம் எடப்பாடியிலேயிருந்து மருந்து வாங்கிக் குடுத்துக்கிட்டுத்தான் இருக்கேன்.''

கியப் பயல் நாட்டாமைப் பண்ணைக்குத் தானே?''

''ஆமாம், ஆனா அவரு உன்னைவிட யோக்கியரு..''

''மயிலு! நீ நாட்டாமை பண்ணைக்கி வேலைக்குப் போவப்படாது. வேறெந்தத் தோட்டத்துக்கு வேணும்னாலும் போ. அப்பிடி இல்லேன்னா ஊட்டுக்குப் போ! எவ்வளவு பணம் வேணும்னாலும் நான் கொண்டாந்து தாறேன்.''

''ஹ்ூம், இங்கே எவனுக்கு வேணும் உன் தண்ணி வித்த காசு!'' என்று அலட்சியமாகச் சொல்லிவிட்டு நகர்ந்தாள். அவள் வீசியெறிந்த வார்த்தைகள் அவன் நெஞ்



''அது சரி மயிலு! பாட்டி உங்கிட்டே சொல்லியிருப்பாளே, நான் எத்தினி நாளக்கி தான் இப்பிடிக் காடு மேடெல்லாம் தனிக் கட்டையா அலையறது? சீக்கிரமா ஒரு நாள் பாத்திடுவோம்.''

''கேட்டுக்கோ. எந்தக் காலத்திலேயும் உன்னை மாதிரி நாடோடியா, வேலை வெட்டி பாக்காமே, சனத் தொழிலு செஞ்சிக்கிட்டுத் திரியற ஒருத்தனை நான் செத்தாலும் கட்டிக்க மாட்டேன். போதுமா?''

''என்ன மயிலு, வாய் நீளுது? இப்போ நீ எங்கே கூலிக்குப் போறே? அந்த அயோக்



மோட்டார் சைக்கிளின் பின்னால் இப்படிப் பயணம் செய்வதுதான் இன்று இளைஞர்களிடையே ஃபாஷனும். ஆனால் இதில் ஆபத்து அதிகம் என்று போலீஸ் எச்சரிக்கிறது. படம்: உத்தரா

சில்கருவ முள்ளாய்க் குத்தின. அவளது இடது கையை எட்டிப் பிடித்து இழுத்தான் அவன்.

அவ்வளவுதான். மறுகணம்...

'பளார்!'

மயிலாத்தாளின் வலது கை ரங்கனின் இடது கன்னத்தில் பதிந்தது. என்ன செய்வதென்றே தெரியாமல் திக்பிரமை பிடித்தவன் போல ஆடாமல், அசையாமல் சிலைபோல் நின்றான். அவனது வலது கை அடிபட்ட இடது கன்னத்தைத் தடவிக் கொடுத்தது. மயிலு வயல் வெளியில் மிக வேகமாய் ஓடி ஒரு புள்ளியாய் மறைந்தாள்.

களத்து மேட்டில் மயிலுக்கு வேலையே ஓடவில்லை. குமரியர் கூட்டம் தங்கள் விருப்பம் போல் அரட்டையிலும், சிரிப்பிலும் நேரத்தைக் கடத்திக் கொண்டிருந்தது. மயிலு அவர்கள் பேச்சில் கலந்து கொள்ளவில்லை; கலகலப்பாகவும் இல்லை.

' என்னதான் இருந்தாலும் மாமன் மேலே கைநீட்டி இருக்கப்படாது. அப்பிடி என்னதான் அந்த ஆம்புளே என்னைப் பண்ணிப் போட்டாரு ? ஒரு ஆம்பளையெ, அதிலும் தாய் மாமனைக் கை நீட்டிக் கன்னத்திலே அடிச்சது எவ்வளவோ பெரிய தப்பு? அப்போ, அதும் மனசு என்ன பாடு பட்டிருக்கும்?' தன் அவசரச் செயலுக்கு, வருந்தித் துடித்து அழுத நெஞ்சுக்கு அவளே ஆறுதலும் சொல்லிக் கொண்டாள். இருந்தாலும் மனசு ஆறுமா?

சேடிப் பெண்கள் தங்கள் இருப்பிடங்களுக்குத் திரும்பும் நேரம். பெரிய பண்ணை களத்திலிருந்த பெண்கள் எல்லோரும் புறப்படத் தயாராகக் கையில் தூக்குப் போசியோடு நின்றனர்.

''ஏண்டி, மயிலு! போலாமா, பொழுது ஆயிப் போச்சடி'' என்று பறந்தாள் கண்ணம்மாள்.

'' நீங்கள்ளாம் முன்னாலே நடையைக் கட்டுங்கடி. நான் போயி நாச்சான்கிட்டே எடப்பாடி போயி பாட்டிக்கு மருந்து வாங்கியாறச் சொல்லிப்போட்டு உங்க பொறகாலே ஓடியாறேன்'' என்றதும் பெண்கள் நடையைக்கட்டினர்.

''மயிலு அடுப்பைப் பத்த வெச்சி அண்டாத் தண்ணியே மேலே வெச்சிடு. தண்ணி காய்ந்தா ரெண்டு சொம்பு மேலே ஊத்திக்கச் சுகமாயிருக்கும்'' என்றார் நாட்டாமை. அவள் அடுப்பைப் பற்ற வைத்துவிட்டு, முகம் கழுவி முந்தானைச் சேலையால் துடைத்துக் கொண்டு நின்றாள். மழைத் துளிகள் இரண்டொன்று உதிர்ந்தன. அண்ணாந்து வானத்தைப் பார்த்தாள். மழை மேகங்கள் கொட்டு முழக்கம் போட்டுக் கொண்டிருந்தன.

''அடடா, காலங்காத்தாலே களத்துலே காயப் போட்ட பயிரை உள்ளே அள்ளிக் கொட்டாமயே போயிட்டாங்களே, இந்தப் பொண்டுக. மழை பெருசா வந்துடுமோ என்னமோ? மயிலு இதை வழிச்ச உள்ளே கொட்டிட்டுப் போயிடேன்'' என்று கெஞ்சும் குரலில் சொன்னார் நாட்டாண்மை. மயிலாத்தாளுக்கும் மனம் கரைந்தது. கூடையில் பயிரை அள்ளத் தொடங்கினாள். நாட்டாமை சாலைக்குள் சென்று விட்டார்.

மயிலு கூடையில் பயிரை அள்ளிக்கொண்டு சாலைக்குள் வந்தாள். சாலையின் ஒரு பக்கமாய்த் தூணோடு சாய்ந்து உட்கார்ந்திருந்தார் நாட்டாமை. மயிலு கீழே குனிந்து பயிரைக் கொட்டிப் பரப்பினாள். ஒரு விநாடி—

நாட்டாமையின் கண்ணுக்கு இளமை விருந்து. அவர் பார்வை படர்ந்த இடத்தை அவளது இடது கை இழுத்து மூடியது. வெறுங் கூடையை எடுத்துக் கொண்டு வெளியே வந்தாள்.

நாட்டாமையின் உள்ளம் துள்ளாட்டம் போட்டது. ஏகாந்தமான தனிமை—எழில் கொஞ்சும் இளமங்கை — துணைக்கு ஐப்பசி மாதத்தின் அடை மழைக் குளிர் காற்று — நாட்டாமைக்கு இளமை திரும்பிவிட்டதில் ஆச்சரியம் ஒன்றுமில்லையே ? இப்போது வெளியே இருட் போர்வை உலகை நன்றாகப் போர்த்திவிட்டது.

அப்போது —

நாட்டாமை பாய்ந்து சென்று மயிலாத்தாளை இறுகக் கட்டி அணைத்துக்கொண்டார்.

''சீ, விடுடா!. மனுஷனுடா நீ ?''

மயிலு நாட்டாமையின் அணைப்பிலிருந்து திமிறிக் கொண்டு வெளியே ஓடிவிடப் பார்த்தாள். உரமேறிய அந்த இரும்புக் கரங்களில் இருந்து விடுபட அந்த மணிப் புருவால் முடியுமா ?

நாட்டாமை கொஞ்சம் தடுமாறிப் போனாலும் கைக்கு அவளது ரவிக்கையின் முதுகுப் பகுதி கிடைத்தது. அதே நேரத்தில் அவளைக் காலால் இடறிவிட்டார்.

வெட்டி வீழ்த்தப்பட்ட மரம் போல் கீழே சாய்ந்தாள் மயிலு. அவள் கைகள் மார்பை இறுக மூடியிருந்தன. நாட்டாமையின் கையில் பாதியாய்க் கிழிந்த ரவிக்கை ஊசலாடியது. காலையில் தனக்கும், ரங்கனுக்கும் இடையே நடந்த வாக்குவாதம் அவள் நெஞ்சில் ஊசலாடியது. அதை அவள் இப்போது எண்ணிப் பார்த்து என்ன பயன்? அதனால் நடக்கப்போவதென்ன ?

வெறி பிடித்த காம வேங்கை பிறாண்டியது. போராட்டத்தில் மயிலின் மணிக் கைகளில் அணிந்திருந்த கண்ணாடி வளையல்கள் நொறுங்கின. பூக்கரங்களில் இரத்தக் கசிவு.

வாழ்க்கையில் அதிர்ஷ்டமுள்ள ஆடவர் ஒருவரை மீண்டும் சந்திக்கும்போது...

...அவர் அணிந்துள்ள ஆடைகளின் அழகையும் பாருங்கள்!



நிச்சயமாக, மபத்லால் க்ரூப் அளிப்பவை நேர்த்தியான துணிமணிகள்தான்!

முகத்திலும் தோளிலும் நகத்தின் பிராண்டல்கள். இற்றுப் போன பழைய சேலை நார் நாராய்க் கிழிந்தது. அவள் ஓலமிட்டாள். அவள் அலறலைக் கேட்டு உதவ யார் அங்கே வரப் போகிறார்கள்?

இனி அவளால் அந்தக் காம வெறியனுடன் போராட முடியாது. எது நடக்கக் கூடாதோ, அது நிச்சயமாக நடந்தே தீரும். அந்த அறியாப் பேதை என்னதான் செய்வாள்? தன் சக்தி முழுதும் ஒன்றுகூட்டி அலறினாள். அவள் அலறல் அந்தப் பிராந்தியம் முழுவதிலும் எதிரொலித்தது. மறுகணம் –

''ஐயோ !''

நெஞ்சைப் பிளக்கும் அலறலுடன் தம் அணைப்பை விட்டார் நாட்டாமை. மயிலு சுதாரித்துக் கொண்டு எழுந்து சாலையின் வாசலுக்கு வந்தாள்.

அங்கே –

தெய்வத்தால் அனுப்பப்பட்ட தேவ தூதனைப் போல் நின்றிருந்தான் ரங்கன். காலையில் தன்னைக் கை நீட்டி அடித்துவிட்டுச் சென்றவள் எப்படியும் மாலையில் திரும்பி வந்துதானே ஆக வேண்டும் என்று அதே இடத்தில் வெகு நேரமாய்க் காத்திருந்தான்.

'அந்த அயோக்கிய நாய் நாட்டாமை மயிலை எப்படியோ வளைச்சுப் போட்டான். அந்தச் சிறுக்கியும் அவன் காசிலே மயங்கிப் பல்லை இளிச்சிருப்பா. இல்லேன்னு காத்தாலே என்னையே கைநீட்டிக் கன்னத்திலே அறைஞ்சிருப்பாளா ?

'அந்தக் கேடு கெட்டவனை இன்னும் காணோம். இப்போ களத்துலே அவங்க ரெண்டு பேர் மாத்திரம் தனியா இருப்பாங்க. ஒரே கல்லுலே ரெண்டு மாங்காய். என் பரம விரோதி நாட்டாமையும் ஒழிஞ்சான். இந்தக் குடிகேடியையும் குத்தித் தொலைச்சிப் போடறேன்' என்று மனத்துக்குள் கறுவிக் கொண்டு பெரிய பண்ணை களத்து மேட்டுக்கே நேராக வந்துவிட்டான். ஆனால் அங்கே அவன் எண்ணத்துக்கு மாறாக மயிலாத்தாளின் ஓலம் அவன் காதில் எதிரொலித்தது. அவள் கற்பு நாட்டாமையால் சூறையாடப் படவிருந்தது அவன் கண்ணில் பட்டது.

தனக்கு அவள் ஆசை மனைவியாவாள் என்று எதிர் பார்த்திருக்க, அவள் தன் எதிரியின் கையில் சிக்குண்டு கிடப்பதை அவனால் பொறுத்துக் கொள்ள இயலவில்லை. அவன் இடுப்பில் சுகமாக உறங்கிக் கொண்டிருந்த பிச்சுவா, நாட்டாண்மையின் முதுகில் ஆழப் பதிந்தது. என்ன, ஏது எப்படி என்று உணர்ந்து சுய நிலைக்குத் திரும்ப அவனுக்குச் சிறிது நேரம் பிடித்தது.

''அயோக்கிய நாய் முடிஞ்சே போயிட்டான். மயிலு! உடனே இங்கேயிருந்து வூட்டுக்கு ஓடிப் போயிடு. நான் எங்கேயாவது ஓடிப் போறேன். நான் இவனைக் குத்தித் தள்ளினது உன்னைத் தவிர, வேறே யாருக்கும் தெரியாது. தெரியவும் படாது. இதெப் பத்தி யாருகிட்டேயும் மூச்சுவிடாதே. ம், வூட்டுக்கு ஓடு '' என்று அவள் கையைப் பிடித்து அவளைச் சாலைக்கு வெளியே இழுத்து வந்தான்.

''சீ, கையை வுடு. நீ ஓடிப் போயிடு, இங்கேயிருந்து'' என்று சொல்லி அவன்



**ஜீயரின் வேண்டுகோள்**

கோயில் இல்லா ஊரில் குடியிருக்க வேண்டாம். இதன் பலனாக, பாரதத்தில் பல லட்சம் கிராமங்களிலும் கோயில்கள் எழுந்துள்ளன.

எத்தனையோ பல கோயில்கள் சிதிலமாகி, வழிபாட்டு முறைக்கு வழியின்றிக் கிடக்கின்றன. இவற்றை ஜீர்ணோத்தாரணம் செய்து, இவற்றை நம்பி வாழும் மக்களுக்கு வயிற்றுப்பாட்டுக்கு வழிசெய்யும் முயற்சியில் ஸ்ரீ திரிதண்டி ஸ்ரீமந் நாராயண ராமாநுஜ ஜீயர் ஸ்வாமி அவர்கள், 'அகில பாரத திவ்விய தேச இதர தேவாலய ஜீர்ணோத்தாரண சமிதி' நிறுவியுள்ளார்கள். 'நிதி மிகுந்தவர் பொற்குவைதாரீர்' என்னும் வேண்டுகோளை விடுக்கும் ஸ்ரீ ஸ்வாமிஜி, சிறு துளி பெரு வெள்ளமாகச் சிறுகச் சிறுகச் சேர்த்துப் பெரும் பணி புரியவும் ஒரு திட்டம் வகுத்துள்ளார். சக்தியானுசாரம் மாதம் ஒன்றுக்கு ஒரு ரூபாயாவது லட்சம் பேருக்குக் குறையாமல் அளிக்க முன்வருவார்களானால் இப் பணி சிறந்து பெரும் பயன் தரும் என்று நம்புகிறார்கள். மேலே குறிப்பிட்ட சமிதியின் பெயருக்கு, 13, தெற்கு உத்தர வீதி, ஸ்ரீரங்கம், திருச்சி- 620006 என்ற முகவரிக்கு பக்த அன்பர்கள் தொடர்பு கொள்ள வேண்டுகிறோம்.

பிடியிலிருந்து தன் கையை உதறிக் கொண்டாள் மயிலு. அவள் சில விநாடிகள் நின்று அவனை முறைத்துவிட்டுக் களத்தைக் கடந்து வயல்வெளியில் எங்கோ ஓடி மறைந்தாள்.

அவள் ஆடியது நாடகம் என அவன் உணரவில்லை. தன்னைக் காப்பாற்றியவனிடம் அவளுக்கு நன்றி பொங்கிய போதிலும் அவனை ஏசியது அவனைத் தப்புவிக்கத்தான் ! குற்றத்தைத் தன் மீதே போட்டுக் கொள்ளத்தான்!

மனத்தில் ஒரு தீர்மானத்துக்கு வந்தவளாக-

'ம், அதாஞ் சரி, அப்பிடித்தான் செய்யோணும்' என்று சொல்லிக் கொண்டே சாலைக்குள் நுழைந்து நாட்டாமையின் அருகே சென்றாள். கீழே குனிந்து நாட்டாமையின் முதுகில் செருகி நின்ற அந்தக் கத்தியைத் தன் முழு வலிமையையும் சேர்த்து இழுத்தாள்.

உடலில் இருந்து கத்தி இழுக்கப்பட்ட வேகத்தில் பீறிட்ட இரத்தம் திட்டுத் திட்டாய் அவள் சேலையை நனைத்தது. அவள் வலது கையில் இறுகப் பிடித்திருந்த கத்தியிலிருந்து இரத்தம் சொட்டுச் சொட்டாய் அவள் மேலெல்லாம் வழிந்தது.

அவள் மௌனமாக அடி மேல் அடி எடுத்து வைத்துச் சாலையை விட்டு வெளி வந்து களத்தைக் கடந்தாள். வயல்வெளியைத் தாண்டி, நீண்டு நெளிந்து செல்லும் பாதைக்கு வந்தாள்.

முன்னிரவின் மங்கிய நிலவொளியில் மயிலாத்தா காவல் நிலையத்தில் நின்றாள்.

# ௨ ஃபாஸ்ஃபோமின் டானிக்...









## ஃபாஸ்ஃபோமின் அயன்

**பெண்களுக்கான
அயன் டானிக்**

ஃபாஸ்ஃபோமின் அயன் சத்து மிக்க சிவப்பு இரத்தம் உருவாகக் காரணமாயிருந்து உதவுவதுடன் சக்தியையும் பெருக்குகிறது. பெண்களுக்கான ஃபாஸ்ஃபோமின் அயனைத் தவறாமல் தினம் உட்கொள்ளுங்கள்.

## ஃபாஸ்ஃபோமின் விடமின்

**குடும்பத்திற்கான
விடமின் டானிக்**

ஃபாஸ்ஃபோமின் குடும்ப ஆரோக்கியத்திற்குத் தேவையான விடமின் பி காம்ப்ளெக்ஸ் மற்றும் பல்வேறு கிளிஸரோபாஸ்பேட்டுகள் அடங்கிய விடமின் டானிக்காகும்.

**குடும்பத்தினர் அனைவரும் திட ஆரோக்கியத்துடன் திகழ 2 ஃபாஸ்ஃபோமின் டானிக்**

ஃபாஸ்ஃபோமின் அளிக்கும் இரு டானிக்குகளும் பசியைத் தூண்டி, வலிவைப் பெருக்கி, நோய்களை எதிர்க்கும் சக்தியைக் கூட்டுவனவாகும்.

SQUIBB® SARABHAI CHEMICALS LTD.

SHILPI SC 8A/74 TAM

# அவள் ஒரு தொடர்கதை



பாலசந்தர்

லட்சிய வாழ்க்கையைச் சிலர் விரும்பி ஏற்பார்கள். வேறுசிலர்மீது அது திணிக்கப்படுகிறது. இப்படத்தின் கதாநாயகி எல்லாப் பெண்களையும் போல் கல்யாணம் பண்ணிக் கொண்டு குடியும் குடித்தனமுமாக இருக்கவே பிரியப்படுகிறாள். ஆனால் யதார்த்த நோக்கில் அது சாத்தியமில்லாது போகிறது. குடும்பத்தைக் காக்க லட்சிய வாழ்வு மேற்கொள்ள வேண்டிய நிர்ப்பந்தத்துக்கு உள்ளாகிறாள்.

படத்தில் சிலர் தங்கள் காதலைத் தியாகம் செய்து விடுகிறார்கள். விரும்பிச் செய்யவில்லை. இன்னொருத்தருக்கு வாழ்வு தருவதற்காகக் காதலைத் தியாகம் செய்துவிடும் லட்சியப் போக்கே யதார்த்த நோக்கில் எளிதாயிருப்பதால் அப்படிச் செய்து விடுகிறார்கள். இவ்வாறு யதார்த்த நோக்கே லட்சிய வாழ்வுக்கு உரமாக அமையக் கூடும் என்பதை மிக அழகாகச் சித்திரிக்கிறது இந்தப் படம்.

இன்றைய (அ)நாகரிகப் போக்கினாலும், அனர்த்தச் சட்டங்களாலும் விளையும் சில விபரீதங்களைச் சுட்டிக் காட்டுகிறார் டைரக்டர் பாலசந்தர். சுட்டிக் காட்டுவதுடன் நிறுத்திக் கொள்கிறார். அதை வைத்து ஓர் உபதேச வியாக்கியானம் நிகழ்த்தவில்லை. அறிவுரை வழங்கினால்கூட மனத்தில் பதியாமல் போகலாம்; பாலசந்தர் சுட்டிக் காட்டும் போது இதயத்தில் சுருக்கென்று தைக்கிறது.

இவையெல்லாம் துண்டு துண்டாய் நிற்காமல் கதாநாயகியின் சோகக் கதையைச் சுற்றிப் படரும் கொடிகளாக உருவாகியுள்ளதுதான் விசேஷம். காமெடிக்கென்று சிலரைச் சேர்க்காமல் பிடிவாதமாக இருந்திருக்கும் பாலசந்தர் பாட்டு — டான்ஸ் விஷயத்தில் விட்டுக் கொடுத்திருக்கிறார்.

குமட்டியைத் திருதிரு வென்று எரிய விடுவதிலும் முகத்தில் கரியைப் பூசுவதிலும் உள் அர்த்தங்களை வைக்கிறாரே அது மட்டுமல்ல, பாலசந்தரின் திறமை. முற்றிலும் புது முகங்களை ரொம்பவும் அனுபவப்பட்டவர்கள் போல் நடிக்கச் செய்திருக்கிறாரே அங்கேதான் முழுமையாகச் செயல்படும் அவர் ஆற்றலைக் காண்கிறோம்.

எம். எஸ். பெருமாளின் கலைமகளில் வெளியான குறுநாவலை அடிப்படையாகக் கொண்டு எடுக்கப்பட்ட படம்.

குழந்தைகளை அழைத்துச் செல்வோருக்கு அவர்கள் கேட்கக் கூடிய சில தர்மசங்கடமான கேள்விகளுக்கு நேரடியான பதிலளிக்கக் கூடிய மனத் துணிவு வேண்டும்.

அண்ணாவின் படத்துக்குப் பூஜை போட்டுத் தொடங்கும் திரைப்படம் அவர் ஆன்மாவைக் குளிரச் செய்யும். கடமை, கண்ணியம், கட்டுப்பாடு ஆகியவை பெண்ணுருக் கொண்டு வந்திருப்பது போலல்லவா விளங்குகிறாள் கதாநாயகி!

'ஃபடா ஃபட்' என்று அலட்சியமாகக் கூறி இப்படத்தை ஒதுக்கி விடுவதற்கில்லை!

—குட்டி கிருஷ்ணன்

# பொன்னியின்



## 18. நவசக்தி நாட்கள்

அறிவிலே தெளிவு, நெஞ்சிலே உறுதி,
அகத்திலே அன்பினோர் வெள்ளம் — பாரதியார்

கல்வியின் வாழ்க்கைக்கு ஆரம்ப ஆசிரியர் அய்யாசாமி அய்யர். பத்திரிகைத் தொழிலுக்கு ஆரம்ப ஆசிரியர் கலியாணசுந்தர முதலியார். அய்யர் விஷ்ணு பக்தர் - முதலியார் சிவ பக்தர். ஆனால், ''எல்லாச் சமயங்களிலும் உள்ள அடிப்படையான உண்மைகளை-சமன்வயப்படுத்தும் சமரச சன்மார்க்க நெறியை'' இருவரும் போற்றினார்கள். அய்யரைப் போலவே முதலியாரும் புறத் தூய்மையும் அகத் தூய்மையும் கொண்ட உத்தமர். அய்யருக்கும் குழந்தைகள் இல்லை; முதலியாருக்கும் இல்லை. ஒருவர் பாலகிருஷ்ணனையும் மற்றவர் பால முருகனையும் தொழுதார்கள். அந்தத் தெய்வக் குழந்தைகளின் வடிவங்களாய் எல்லாக் குழந்தைகளையும் கண்டார்கள்.

''எவ்வுயிருக்கும் செந்தண்மை பூண்டொழுகிய திறத்தினால் அந்தணர் திலகமாகத் திகழ்ந்தார்'' என்று முதலியாரைக் குறித்துக் கல்கி எழுதினார். கிராமத்தில் விட்டு வந்த ஓர் அந்தணர் திலகத்துக்கு ஈடாகச் சென்னையில் ஒருவர் கிடைத்தார் கல்கிக்கு.

அவர்கள் இருவருக்கும் இன்னும் ஓர் ஒற்றுமை. தானாகவே மாணாக்கன் கற்றுக்கொள்ளும்படி செய்வது அய்யாசாமி அய்யரின் ''போதனா முறை''. தம்மிடம் வேலை செய்ய வருவோர் தாமாகவே தொழிலைக் கற்றுக் கொள்ளும்படி செய்வது கலியாணசுந்தரனாரின் ''பயிற்சி முறை.'' தமிழ் ஆசிரியராய் இருந்த அவர் தேசபக்தன் இதழின் ஆசிரியரானபோது தாமாகத்தான் பத்திரிகைத் தொழிலைக் கற்றுக் கொண்டார். அல்லது அவருக்கு உதவியாளராய்ப் பணியாற்றி வந்த வெ. சாமிநாத சர்மாவும் சேர்ந்து கற்றுக்கொண்டார்கள் என்று சொல்லலாம். அன்னிபெஸண்ட் அம்மையாரின் பண உதவியுடன் சுப்பராய காமத் என்பவர் தொடங்கிய பழைய ''தேசபக்தன்'' பத்திரிகையில் கையாண்ட அதே சுயப் பயிற்சிக் கொள்கையைத்தான் தமது சொந்தப் பத்திரிகையான ''நவசக்தி'' சம்பந்தமாகவும் கையாண்டார். ஆயினும் புதிதாக வருகிற ஒருவருக்குத் தொழிலின் ஆனா ஆவன்னாவைச் சொல்லிக் கொடுக்க வேண்டியது அவசியம். அந்த அவசியமான காரியத்தையும் கூட அவர் செய்ய மாட்டார். அதிகாரம் செய்வதுபோலவோ, வேலைவாங்குவதுபோலவோ அது தோன்றக் கூடும் என்பது அவருடைய எண்ணம்.

வெண்மையான எளிய கதர் உடை — சநாதன ஹிந்து தர்மத்தில் அவருடைய ஆழ்ந்த பற்றுக்கு அறிகுறிகளான உச்சிக் குடுமி, சந்தனப் பொட்டு —



● ''காந்தி சொன்னார் என்று கயிறு திரிக்கிறீர்களே, இதனால் என்னய்யா பிரயோஜனம்? வெள்ளைக்காரனை இதனால் விரட்டிவிட முடியுமா?''


நவசக்தி

● ''எவ்வுயிர்க்கும் அன்பாயிரு'' என்ற முத்திரை வாக்கியத்தைக் கொண்டிருந்த பத்திரிகை.
புகைப்படம்: இரா. முத்துக்குமாரசாமி.

# புதல்வர்

சுந்தா

இவை தூய்மை ஒளி வீச, 1923ம் ஆண்டு அக்டோபர் 20ம் தேதியன்று நவசக்தி அலுவலகத்தின் அறை ஒன்றில் சிவப் பழமாய் அவர் உட்கார்ந்து, ஏதோ எழுதிக் கொண்டிருந்தபோது, இளைஞர் கிருஷ்ணமூர்த்தி, அவர் முன்னே மரியாதையுடன் நின்று வணக்கம் செய்தார்.

''வாருங்கள் கிருஷ்ணமூர்த்தி'' என்று முதலியார் அன்புடன் அவரை வரவேற்று அமரச் செய்தார். ''உங்கள் கடிதம் கிடைத்தது. என்னுடன் பணியாற்ற வந்தமைக்கு மிகவும் நன்றி பாராட்டுகிறேன்.''

சிவனடியார் போல் இருக்கும் அத்தனை பெரியவர் தமக்கு அத்தனை மரியாதை கொடுப்பதையும், வேலைக்கு வந்தவனுக்கு நன்றி தெரிவிப்பதையும் கண்டு கிருஷ்ணமூர்த்தி திகைத்தார். அந்தத் திகைப்புடன் வியப்பு ஒன்றும் சேர்ந்து கொண்டது. அவ்வளவு தூய்மையான மனிதர், அழுக்குப் படிந்த மேஜை நாற்காலிகளும், காகிதக் குப்பை கூளங்களும் நிறைந்த ஓர் அறையில் உட்கார்ந்திருக்கிறாரே என்ற வியப்பு அது! அவ்விதச் சூழலிலிருந்தா செந்தமிழ் நடைக்கும், தேசபக்திக்கும், தெய்வ பக்திக்கும், அழகுத் தத்துவத்துக்கும் பேர்போன பத்திரிகை வந்து கொண்டிருந்தது?

''பத்திரிகையின் பிரதம உதவி ஆசிரியர் சாமிநாத சர்மா, காக்கிநாடா காங்கிரசுக்குப் போயிருக்கிறார். அவர் இரண்டு மூன்று நாட்களில் வந்து விடுவார். அவர் வருகிறவரை நீங்களே விருப்பம் போல் வேலையைப் பழகிக் கொள்ளலாம்.''

இவ்வாறு முதலியார் சொல்லி, கிருஷ்ணமூர்த்தியை அடுத்த அறைக்கு அழைத்துப் போய், ''இதுதான் அவருடைய அறை. நீங்களும் இங்கேயே இருக்கலாம்'' என்று கூறிவிட்டுப் பரிவுடன் ஒரு பார்வையைப் பொழிந்தபடி திரும்பச் சென்றார்.

அந்த அறையில் இருந்த இரண்டு பழைய மேஜைகள் மேலும் தரையிலும் வெற்றுக் காகிதங்களும் பத்திரிகைத் தாள்களும் குவிந்தும் சிதறியும் கிடந்தன. நாலைந்து நாற்காலிகள் இருந்தன. அவற்றில் ஒன்றுக்கு ஒரு கை இல்லை; இன்னொன்றுக்கு இரண்டு கைகளும் இல்லை. ஒரு நாற்காலி முக்காலியாய் இருந்தது. உருப்படியாகத் தோன்றிய நாற்காலி ஒன்றை அசைத்துப் பார்த்து விட்டு, அதில் உட்கார்ந்து, 'இங்கே ஏன் வந்தோம்? வந்தது சரியா?' என்று கொஞ்சம் யோசித்தார் கல்கி. தலை



- சட்டைப்பையிலிருந்து வேலங்குச்சி ஒன்றைச் சாமிநாதசர்மா எடுத்து அதன் நுனியில் நிப் ஒன்றைப் பொருத்தி ஒரு நூலினால் சுற்றிக் கட்டினார்...
- பிற்காலத்தில் திரு. வி. க. மணிமண்டபம் உருவாகக் கல்கி பெருமுயற்சி எடுத்துக் கொண்டார். அடிக்கல் நாட்டு விழாவின்போது...
- சாமிநாத சர்மாவுக்கும் கல்கிக்கும் இடையே இருந்த உறவு உள்ளத்தோடு உள்ளம் ஒன்றுபட்ட உறவாகவே இருந்து வந்தது.






மயிரைத் திருகிக் கொண்டே, பக்கத்து மேஜை மேல் இருந்த ஒரு ''நவசக்தி'' இதழைப் பார்த்தார். ''எவ்வுயிர்க்கும் அன்பா யிரு'' என்ற முத்திரை வாக்கியம் கண்ணில் பட்டு ஒரு புதிய வேகத்துடன் கருத்தில் பதிந்தது. ''மேஜை நாற்காலி எப்படி இருந்தால் என்ன? சூழ்நிலை எப்படி இருந்தால் என்ன? என்ன அசௌகரியம் இருந்தால் என்ன? எல்லாவற்றையும் மறந்து வேலை செய்வேன். எழுத வேண்டும், எழுத வேண்டும் என்று மனத்தில் அலை மோதும் ஆசையைத் தீர்த்துக்கொள்வேன். இந்த நவசக்தியின் மூலம் புதுப் புதுச் சக்திகளை என்னுள்ளே பெருக்கிக் கொள்வேன்....''

மூன்று நாட்கள் கழித்து சர்மா வந்தார். அவருக்குக் கிருஷ்ணமூர்த்தியை திரு வி. க. அறிமுகப்படுத்தினார். அதைப் பற்றிப் பல ஆண்டுகளுக்குப் பிறகு, சர்மா ஒரு கட்டுரையில் எழுதினார்:

''இந்த இளைஞரை உதவி ஆசிரியராகச் சேர்த்திருக்கிறது. டாக்டர் ராஜன் இவரைப் பற்றி நிறையச் சொல்லியிருக்கிறார். பத்திரிகைத் துறையில் இவருக்கு வழி காட்டி விடுங்கள்'' என்றார், என்னைக் கல்கிக்கு அறிமுகப்படுத்தி வைக்கிற முறையில்... (அவரிடம்) ''நல்லவிதமாக உங்களுக்கு வழிகாட்டுவார்; எதையும் சங்கோசமின்றி இவரைக் கேட்கலாம்'' என்று கூறினார்.

கல்கிக்கு நீண்ட காலம் வழி காட்ட வேண்டிய அவசியம் எனக்கு ஏற்படவில்லை. வெகு சீக்கிரத்தில் அவர் தடம் பிடித்துக் கொண்டு விட்டார். சொற்ப காலத்துக்குப் பிறகு அவர் நூற்றுக்கணக்கான எழுத்தாளர்களுக்கு வழிகாட்டியாக இருந்து வந்தார் என்பதைத் தமிழுலகம் நன்கறியும்.....

பத்திரிகைக்குத் தேவைப்படும் முக்கியமான செய்திகளைத் திரட்டிக் கொடுப்பதிலோ அச்சகத்துக்குக் கஷ்டமில்லாதபடி 'காபி'யை ஒழுங்குபடுத்திக் கொடுப்பதிலோ, பிறர் வழி காட்டிக் கொடுக்க வேண்டிய அவசியம், கல்கிக்கு ஆரம்பத்திலிருந்தே அதிகமாக ஏற்படவில்லை. ஏதேனும் அடித்தல் திருத்தல் ஓரிரண்டு இடங்களில் ஏற்படுமானால், அதற்காக அவர் முகம் சுளித்துக் கொள்ளமாட்டார். மாற்ற வேண்டிய காரணத்தைக் கேட்டுத் தெரிந்து கொள்வார். மேன்மேலும் அனுபவம் பெற வேண்டும் என்பதில் அதிக ஆவல் காட்டுவார்.

(ஆ. வி. 8-9-'63)

அறிமுகம் செய்து வைத்துவிட்டுத் திரு வி. க. சென்ற பிறகு, கல்கி கண்டு மனத்திற்குள்ளே சிரித்துக் கொள்ளும் படியான காரியம் ஒன்றைச் சாமிநாத சர்மா செய்தார். சட்டைப் பையிலிருந்து பல் தேய்க்கும் குச்சியின் அளவிலிருந்த வேலங்குச்சி ஒன்றை அவர் எடுத்து அதன் ஒரு நுனியில் 'நிப்' ஒன்றைப் பொருத்தி ஒரு நூலினால் சுற்றிக் கட்டினார்.

''என்ன இப்படிப் பார்க்கிறீர்கள்? இங்கே நம் எழுத்துக்கு வேண்டிய ஆயுதத்தை நாமேதான் செய்து கொள்ள வேண்டும். —அதுவும் இப்படி மலிவாக. காலணாவுக்கு ஓரண்டு நிப், வேலங்குச்சி மரத்திலிருந்து வேணது இலவசமாய்க் கிடைக்கிறது. பேனாக் கட்டை எல்லாம் இங்கே நிலைக்காது. பலபேர் நடமாடும் இந்த இடத்தில் இந்தக் குச்சிப் பேனாகூடத் திரும்பிப் பார்ப்பதற்குள் தொலைந்து போகும்.''

புது வேலைக்கென்று புதிதாக வாங்கிக் கொண்டு வந்திருந்த ஊற்றுப் பேனா ஒன்றைக் கல்கி பையிலிருந்து எடுத்துக் காட்டினார்.

''பேஷ், நன்றாய் இருக்கிறது. பத்திரமாய் வைத்துக் கொள்ளுங்கள். காணாமல் போகிறவரை நீங்கள் அதிர்ஷ்டசாலிதான்.''

அந்த ஊற்றுப் பேனா காணாமல் போகாமல் இருந்ததா, அல்லது அது காணாமற் போய், கல்கியும் வேலங்குச்சியை உபயோகித்தாரா என்பது சர்மாவுக்கு நினைவில்லை.

கலியாணசுந்தர முதலியார் தலையங்கத்தையும், ஏதேனும் சிறப்புக் கட்டுரை இருந்தால் அதையும் எழுதிக் கொடுத்து விட்டு, மற்றப் பக்கங்களை நிரப்பும் வேலையை, சர்மாவிடமும் கல்கியிடமும் முழுப் பொறுப்பாய் விட்டு விடுவார். என்ன ஏது என்று கேட்டுக் குறுக்கிட மாட்டார். அதிகமாய்க் குற்றங் குறை சொல்ல மாட்டார். பாராட்ட வேண்டியவற்றைப் பாராட்டுவார்.

சர்மாவின் அதே கட்டுரையிலிருந்து:

''தேனீ'' என்ற புனைபெயர் வைத்துக் கொண்டு, உலகத்துப் பலதரச் செய்திகளைக் (கல்கி) சுவைபடத் திரட்டிக் கொடுக்கத் தொடங்கினார். வாரத்தில் குறைந்த பட்சம் ஒரு தடவையாவது இந்தச் செய்தித் திரட்டு வெளிவரும். இதனைத் திரு வி.க. அவர்கள் வெகுவாகப் பாராட்டினார்கள்.

சிறுகதைகள் சிலவற்றையும் 'நவசக்தி'யில் எழுதி வந்தார். சிறுகதைகள் படிப்பதில் திரு வி. க. எப்பொழுதுமே அதிக விருப்பம் காட்டியதில்லை. ஆனால் தமது 'நவசக்தி' பத்திரிகையில் வெளிவரும் கல்கியின் சிறுகதைகளைப் படித்து மகிழ்வார்.

கல்கி, முக்கியமான மகாநாடுகளுக்கு 'நவசக்தி' நிருபராய்ச் சென்று, மகாநாட்டு நிகழ்ச்சிகளைத் தொகுத்துக் கொடுத்து வந்ததை, திரு வி.க. வெகுவாகப் பாராட்டி

# ரூபி டஸ்ட் டீயில் மட்டுமே காணும் மூன்று சிறப்பம்சங்கள்

**1.** கணத்தில் கிட்டிடும் பானம்

**2.** தருவதும் செறிந்த மணம்

**3.** பெருவதோ கோப்பைகள் அதிகம்

RUBY DUST

கெட்டியான டிகாக்ஷன் மட்டுமல்ல; சிக்கனத்தை யும் சிறப்பம்சமாய்க் கொண்ட ஒரே டீ-லிப்டன் ரூபிடஸ்ட். முழுமையான தேநீரின் மறு பெயர்தான் லிப்டன் ரூபி டஸ்ட்.

**ஒவ்வொரு பாக்கெட்டுக்கும் செறிவு மிக்க அதிகக்கோப்பைகள்**

## லிப்டன் ரூபி டஸ்ட்



LRDC-10 TAM

# உங்கள் குடும்பத்தின் ஆரோக்கியத்திற்கு வைட்டமின்களும் தாதுப் பொருள்களும் இன்றியமையாதவை

## அவை போதுமான அளவில் கிடைக்கின்றனவா?

வைட்டமின்கள் மற்றும் தாதுப்பொருள்களின் பற்றுக்குறை குடும்ப ஆரோக்கியத்தைப் பாதிக்கக் கூடும். சோர்வு, ஜலதோஷம், பசியின்மை, உடல் இளைத்தல், சரும மற்றும் பல் உபாதைகளுக்குக் காரணம் இவற்றின் பற்றுக்குறைதான்.

திட்டமிடப்பட்ட உணவில் கூட இக்குறை காணப்படுகிறது. அவ்வாறின்றி குடும்பத்தில் ஒவ்வொருவருக்கும் தேவையான அளவில் இந்த இன்றியமையாத சத்துக்கள் கிடைக்க தினம் விம்க்ரான் கொடுங்கள்.

விம்க்ரானில் 11 முக்கிய வைட்டமின்களும் 8 தாதுப் பொருட்களும் அடங்கியுள்ளன. இரும்புச் சத்து—இரத்தப் பெருக்கத்திற்கும், சுறுசுறுப்பிற்கும், கால்ஷியம்—எலும்புகளையும், பற்களையும் உறுதியாக வைக்கவும், வைட்டமின் 'ஸி'—ஜலதோஷத்தை எதிர்க்கும் சக்தியை அதிகரிக்கவும், வைட்டமின் ஏ—சிறந்த கண்பார்வைக்கும் ஆரோக்ய சருமத்திற்கும், வைட்டமின் பி12—பசியைத் தூண்டி, தாங்கும் சக்தியை அதிகரிக்கும் இவற்றுடன், இதர போஷாக்குச் சத்துக்களும் உள்ளன. இன்று முதல் தினம் உட்கொள்வீர்—விம்க்ரான்!

# விம்க்ரான்®

பலவேறு வைட்டமின்-தாதுச் சத்து மாத்திரைகள்
11 வைட்டமின்கள் + 8 தாதுப் பொருட்கள்



SQUIBB®

SARABHAI CHEMICALS PVT. LTD.

® இ. ஆர். ஸ்க்விப் அண்ட் ஸன்ஸ் இன்கார்ப்பரேட்டட் அமெரிக்காவின் ரெஜிஸ்டர்ட் ட்ரேட் மார்க்காகும். எஸ்.ஸி.பி.எல். இதை உபயோகிக்க உரிமை பெற்றவர்கள்.

ஒரே ஒரு விம்க்ரான் மாத்திரை உங்களை நாள் முழுதும் சக்தியுடன் வைத்திருக்கப் போதுமானது

Shilpi-HPMA 2A/74 Tam

வந்தார். பேனுச் சித்திரம் என்று சொல்லு வார்களே, அந்த வகையில் கல்கியின் 'ரிப் போர்ட்' இருக்கும்.

சாமிநாத சர்மாவை நூலாசிரியன் பேட்டி கண்டபோது, கல்கியின் நவசக்தி நாட்கள் பற்றி முன் சொன்னவற்றுடன், இன்னும் சில சுவையான தகவல்களும் கிடைத்தன.

ஒரு நாள் கல்கி கைராட்டினம் ஒன்றைத் தூக்கிக் கொண்டு அலுவலகத்துக்கு வந்தாராம்.

''என்ன இது, எங்கிருந்து வாங்கிக் கொண்டு வருகிறீர்கள்?'' என்று சர்மா கேட்டார்.

''என்னுடைய சொந்த ராட்டை இது. இங்கு வேலை இல்லாத இடைவேளையில் நூற்கலாமே என்று கொண்டு வந்தேன்''.

''எங்கே நூற்றுக் காட்டுங்கள் பார்க்கலாம்.''

அப்படியே கல்கி, சப்பணங் கட்டி உட்கார்ந்து மார்பை நிமிர்த்திக் கொண்டு வேகமாய் இராட்டையைச் சுழற்றிச் சுழற்றி இழை எடுத்து எடுத்துக் கதிரில் ஊற்றிச் சுற்றினார். சர்மாவின் பாராட்டைக் காதில் வாங்கிக் கொள்ளாதபடி சுழற்றிக் கொண்டே இருந்தார்.

''என்ன, ஒரேயடியாய் லயித்துப் போய் விட்டீர்களே?'' என்று சர்மா உரக்கக் கேட்கவும், கல்கி சுழற்றலை நிறுத்திக் கொண்டு சிரித்தார்.

''இப்படிச் சுழற்றுகிறபோது மனமும் ஆனந்தமாய்ச் சுழலுகிறது. அது தான் இதிலுள்ள சுகம்'' என்றாராம்.

சில நாட்களுக்குப் பிறகு, கல்கி இராட்டையைச் சுழற்றிக் கொண்டிருந்தபோது, தேச பக்தர் சுப்பிரமணிய சிவம் வந்தார். ''என்ன இந்த ராட்டைப் பைத்தியம் உங்களையும் பிடித்துக் கொண்டதா?'' என்று அவரைக் கேட்டார்.

கல்கி மௌனமாக நூலே கண்ணாக இருந்தார்.

''காந்தி சொன்னார் என்று கயிறு திரிக்கிறீர்களே, இதனால் என்னய்யா பிரயோஜனம்? வெள்ளைக்காரனை இதனாலேயே விரட்டிவிட முடியுமா?''

அதற்கும் கல்கி பதில் சொல்லவில்லை. சிரித்தபடியே இராட்டையைச் சுற்றிக் கொண்டிருந்தார்.

1924 செப்டம்பர் 11ஆம் தேதி, சுப்பிரமணிய சிவத்தின் முயற்சியினால், திருவல்லிக்கேணியில், இப்போது தேசிய உயர்நிலைப் பள்ளி அமைந்துள்ள தென்னந் தோப்பில், பாரதி நினைவு நாளை யொட்டிக் கூட்டம் ஒன்று நடைபெற்றது. கூட்டத்துக்குத் தலைமை வகித்த திரு வி. க., பாரதியார் பாட்டுக்களைப் பாடும்படி கல்கியைக் கேட்டுக்கொண்டார். ''வந்தே மாதரம் என்போம்'', ''செந்தமிழ் நாடெனும் போதினிலே'' ஆகிய இரண்டு பாடல்களையும் அவர் உணர்ச்சியுடன் பாடினார். கூட்டம் முடிந்த பிறகு, கல்கியின் முதுகைச் சிவம் செல்லமாய்த் தட்டிக் கொடுத்தார். பிறகு, ''எவ்வளவு நன்றாகப் பாடுகிறான்'' என்று முதலியாரிடம் மகிழ்ச்சியுடன் சொன்னாராம்.

நாத்திகப் பிரசாரத்தில் இறங்கிச் சுயமரியாதைக் கட்சியை நிறுவியதற்கு முன்னால், ஈரோடு ராமசாமி நாயக்கர், திரு வி. க.வைச் சந்திப்பதற்காக அடிக்கடி வருவாராம். கல்கியும் சர்மாவும் அலுவலில் ஆழ்ந்து வேலை செய்வதைக் கண்டு, ''இளம் பிள்ளைகள் இப்படித் தான் உழைக்க வேண்டும்'' என்பாராம். ''கல்கியின் தெளிவான நடை நாயக்கரை அதிகமாய்க் கவர்ந்தது'' என்று சர்மா சொன்னார். அடிக்கடி நாயக்கர் கல்கியுடன் பேச்சுக் கொடுத்து அவருடைய சாதுரியமான பதில்களைக் கேட்டு மகிழ்வாராம். பிற்காலத்தில் கல்கி வெகுவாகச் சோபிப்பார் என்று, நவசக்தி ஆசிரியரிடம் ஈ.வெ.ரா ஒரு சமயம் சொன்னாராம்.

அவருடைய நவசக்தி நாட்களில், பல தேச பக்தர்களின் தொடர்பும், தமிழன்பர்கள், சமயப் பெரியார்களின் நட்பும் கல்கிக்குக் கிடைத்தன. சில மாலை வேளைகளில், பாலசுப்பிரமணிய பக்த ஜன சபை இயங்கிய குகானந்த நிலையத்துக்குச் செல்லுவார். அங்கே திரு வி. க.வின் நண்பர்கள் கூடிப் பல விஷயங்களைப் பற்றிப் பேசுவார்கள்; விவாதிப்பார்கள். அவற்றில் கல்கியும் கலந்து கொள்வதுண்டு.

காங்கிரஸ் கூட்டங்கள், திரு வி.க. பேசிய தொழிலாளர் கூட்டங்கள், இலக்கியக் கூட்டங்கள் முதலியவற்றுக்குக் கல்கி சென்று, பலருடைய பேச்சுக்களை ரசிப்பார். அவைகளைப் பற்றியோ, அவற்றிலிருந்து மணி வாக்கியங்களை எடுத்தோ ''நவசக்தி''யில் எழுதுவார்.

''நவசக்தி''யில் நான் தொண்டாற்றிய காலத்தில் சில சமயம், சூளையில் நடந்த தொழிலாளர் கூட்டங்களுக்குச் சென்றிருக்கிறேன். தொழிலாளர் கூட்டந்தானே என்பதற்காகத் திரு வி. க. தமது பிரசங்கத்தின் நடையை மாற்றிக் கொள்வதில்லை. வழக்கம் போலவேதான் சொற்பொழிவு ஆற்றுவார். அவர் கூறுவதெல்லாம் தொழிலாளர் சகோ

## மணிமொழிகள்

நூலகம் - படித்தவனுக்கு நந்தவனம்; படிக்காதவனுக்கும் பாலைவனம்! -கன்விசா

★

சிரிப்பு என்பது பகல்; அமைதி என்பது இரவு; புன்முறுவல் என்பது இவை இரண்டுக்கும் இடையே ஊசலாடும் மாலைப் பொழுது! -பீச்சர்

---

தரர்களுக்கு விளங்குமா என்று சில சமயம் எனக்குச் சந்தேகம் உண்டாகும். ஆனால் அவர்களுடைய முகங்கள் மட்டும் மலர்ந்து தானிருக்கும். திரு வி. க.வின் வாயிலிருந்து பொங்கும் அன்பே அவர்களுடைய முகங்களை அவ்விதம் மலரச் செய்கின்றது என்று எனக்குத் தோன்றும். திரு வி. க. கடல்மடை திறந்தது போல் பொழிந்த அரிய கருத்துக்களை அவர்கள் உணர்ந்தார்களோ இல்லையோ, ''இதோ நமது அருமைத் தோழர் ஒருவர் பேசுகிறார்'' என்பதை மட்டும் அவர்கள் பரிபூர்ணமாக உணர்ந்திருந்தார்கள்.

(கல்கி இதழ் 10-8-'43)

சென்னையில் ராஜாஜி பேசிய போதெல்லாம் கல்கி சென்று அவரைக் கண்டு மகிழ்ந்ததோடு, அவருடைய பேச்சுக்களிலிருந்து எடுத்த மணி வாக்கியங்களுக்கு நவசக்தியில், ''உதிர்ந்த மலர்கள்'' என்ற பத்தியில் அதிக இடம் கொடுத்தார். மாதிரிக்கு ஒன்றைப் பார்ப்போம் :

*ஸ்ரீமான் ச. இராஜகோபாலாச்சாரி :*

பாரதி பாடல்கள் அரசியலையும் சாதி சமயங்களையும் கடந்து நிற்பவை; இந்தியாவின் மறுமலர்ச்சியைச் சங்கநாதம் செய்து அறிவிப்பவை. தேசியப் புனர் நிர்மாணம் ஆக வேண்டுமானால், தமிழ் மக்கள் அப்புனர் நிர்மாணத்தில் பங்கு பெற வேண்டுமானால், தமிழ் நாட்டிலுள்ள ஒவ்வொரு சிறுவன் சிறுமியின் கையிலும் பாரதி பாடல்கள் அளிக்கப்பட வேண்டும்.

(5-12-'28)

பிரசங்கங்கள் கேட்க வெளியே போகாத மாலைகளில், அலுவலகத்திலேயே கல்கி உட்கார்ந்து இராட்டை சுற்றுவார். இல்லாவிட்டால், எங்கிருந்தேனும் இரவல் வாங்கி வந்த நாவல்களைப் படிப்பார் — ''பலே பேஷ்!'' ''நாசமாய்ப் போச்சு!'' என்று வாய்விட்டுச் சொல்லிக் கொண்டே. சர்மா உடனிருந்தால், தாம் படிக்கும் புத்தகம் என்ன என்பதைச் சொல்லுவார். ''இதைப் போல் எல்லாம் தமிழில் எழுத வேண்டாமோ!'' என்பார்.

சில சமயங்களில் கல்கி சர்மாவிடம் மிக அன்னியோன்னியமாய்த் தமது சொந்தப் பிரச்னைகள் பற்றிப் பேசி, அவருடைய யோசனையைக் கோருவார்.

''கல்கிக்கும் எனக்குமிடையே நிலவி வந்த உறவு, உள்ளத்தோடு உள்ளம் ஒன்றுபட்ட உறவாகவே இருந்து வந்தது'' என்றார் சாமிநாத சர்மா. ''இந்த உறவில் பரஸ்பர உபசாரங்களோ பேச்சுக்களோ அதிக இடம் பெறவில்லை. என்னை அவர் எப்பொழுதும் தமது மூத்த சகோதரனாகவே கருதி நடத்தி வந்தார்.''

தம்மிடம் பிற்காலத்திலும் கல்கி காட்டிய அன்புக்கும் விசுவாசத்துக்கும் எடுத்துக்காட்டாக ஒன்றைச் சொல்லியிருக்கிறார் சர்மா :

1942ம் வருஷம் மே மாதம் நான் பர்மாவிலிருந்து நடைப் பயணமாகத் திரும்பி வந்த பிறகு, என் வருகை தெரிந்ததும், என்னைப் பார்க்கத் தியாகராயநகர் உஸ்மான் ரோடில் உள்ள என் வீட்டுக்கு வந்து என் க்ஷேமலாபங்களை விசாரித்தார். அப்போது அவர் கண்களில் நீர் மல்கியது. அங்கே பர்மாவில் நடந்ததையெல்லாம் விவரமாகக் கேட்டுத் தெரிந்து கொண்டார்.

(ஆ. வி. 8-9-'63)

கலியாணசுந்தர முதலியாரும் கல்கியிடம் சகோதர வாஞ்சை கொண்டிருந்தார். அவரைத் தம்பி என்றே ஓரிடத்தில் குறிப்பிட்டுள்ளார்.

1924 ஏப்ரல் மாதத்தில், திருச்சியில் நடந்த காங்கிரஸ் மகாநாட்டில் திரு வி. க. கலந்து கொண்டபோது, அவருக்குக் காய்ச்சல் வந்துவிட்டது. அப்போது தமக்குக் கல்கி, மற்றவர்களுடன் பணிவிடை செய்ததை, தமது ''வாழ்க்கைக் குறிப்புக்கள்'' நூலில் பாராட்டி எழுதினார் :

மகாநாடு கலைந்தது. சந்தடியில் சிக்கிக் கொள்ள என் உடல் நிலை இடம் தரவில்லை. யான் நேரே காவேரிக்குச் சென்றேன்; சிறிது நேரம் கழித்து உறைவிடம் வந்தேன். வெஞ்சுரம் என்னை எரித்தது. படுக்கையில் சாய்ந்தேன். முதலில் நண்பர் பலரைக் காணேன். அவரெல்லாம் போய்விட்டனர் என்று கேள்வியுற்றேன். எனது நிலையைக் கண்டு வரவேற்புத் தலைவர் ஏக்குற்றார். அவருக்கு யான் தேறுதல் கூறினேன். ரா. கிருஷ்ணமூர்த்தி, வ. வே. சு. ஐயர், பண்டித அசலாம்பிகை அம்மையார், இவர் தம் அன்னையார் என்னைச் சூழ்ந்தனர். ரா. கிருஷ்ணமூர்த்தி தம்பியாக விளங்கினார்.....

(தொடரும்)

## ஒற்றர் ஜாக்கிரதை — சென்ற இதழ் தொடர்ச்சி


















2

# ஒற்றர் ஜாக்கிரதை

கதை: நாடோடி

சித்திரம்: ராஜ்.















கடற்படை அதிகாரிகளின் மனைவிகள் பேச்சிலிருந்து பல தகவல்களை அறிந்தாள் ரூத்.




இரவில் தகவல்களை ஜப்பானுக்கு அனுப்ப ரூத் கையாண்ட முறை..




தொலைவில் இருந்த ஜப்பானிய நீர்மூழ்கிக் கப்பலில்...




வேறு ஒரு நாள்...




பகல் போதில்...




இவ்விதம் சமிக்ஞைகள் மூலம் அமெரிக்க போர்க் கப்பல்களின் நடமாட்டங்களை ஜப்பானியருக்கு ரூத் உணர்த்தி வந்தாள். நீர் மூழ்கிக் கப்பலிலிருந்து ரேடியோ செய்தி டோக்கியோ செல்லும். இதற்கு ரூத் பெற்ற ஊதியம் ஆண்டுக்கு 50,000 டாலர்கள்!



ரூத் காரணமாக பேர்ல் ஹார்பரை ஜப்பானியர் தாக்கி வெற்றி பெறுவது சாத்தியமாயிற்று.



தொடரும்




நேருஜியின் நினைவுப் பரிசு பெற்ற ஆண்ட்ரு மால்ரோ ஓர் அதிசய மனிதர். அதிசய எழுத்தாளர். அவர் இருபது இருபத்திரண்டு வயது இளைஞராக இருந்தபோதே கம்போடியா, லாவோஸ் முதலிய பகுதிகளைச் சுற்றிப் பார்த்தார். அங்கு நிலவும் துன்பத்தையும் துயரத்தையும் கண்டு மனமுருகி எழுதினார். இவ்வளவு துன்பத்துக்கிடையே மனிதனும், மனிதப் பண்பும் உயர்ந்து நிற்பதைக் கண்டார். அதற்காகப் பாடு பட்டார்.

பிறகு சீனவில் சியாங் கே ஷேக் ஆட்சியில் மக்கள் படும் துயரத்தைக் கண்டு அதனை எதிர்க்க கம்யூனிஸ்ட் கட்சியில் சேர்ந்து சீன மக்களின் துன்பத்தைப் போக்கப் பாடுபட்டார்.

ஸ்பெயின் நாட்டில் பிராங்கோ ஆட்சியில் மக்கள் படும் துயரைக் கண்டு புரட்சியாளர்களோடு சேர்ந்து பணியாற்றினர். விமானப் பைலட்டாக இருந்து மக்களின் சுதந்திர வேட்கைக்கு உதவினர்.

பாஸிஸத்தையும் ஹிட்லரின் நாஸிஸத்தையும் கண்டித்து எழுதினர். இரண்டாவது உலக யுத்தத்தில் ஜெர்மானியரால் கைது செய்யப்பட்டார். சிறையிலிருந்து தப்பி வந்து பிரெஞ்சு மக்கள் படையில் சேர்ந்து கர்னல் பதவி ஏற்று சொந்த நாட்டுக்காகப் போராடினர். அப்போது பிரெஞ்சுப் படைகளின் தளபதியாக இருந்த ஜெனரல் டிகாலே எதேச்சையாகச் சந்திக்க நேர்ந்தது. டிகால், மால்ரோவுடன் பேசத் தொடங்கியதுமே இங்கே ஓர் அதிசய மனிதர் இருக்கிறர் என்பதைக் கண்டு கொண்டார். டிகால் அன்றிரவு முழுவதும் மால்ரோவுடன் பேசிப் பேசியே நேரத்தைக் கழித்தார். ஆண்ட்ரு மால்ரோவின் சிந்தனைகளால் அவ்வளவுக்கு டிகால் கவரப்பட்டார். விளைவு என்ன ஆயிற்று என்றல், டிகால் பதவிக்கு வரும்போதெல்லாம் ஆண்ட்ரு மால்ரோவும் பதவியில் இருக்க வேண்டும் என்ற நியதி ஏற்பட்டு விட்டது.

டிகால் இரண்டாம் முறை பதவிக்கு வந்த போது, ஆண்ட்ரு மால்ரோவை கலாசார மந்திரியாக நியமித்தார். ஆண்ட்ரு மால்ரோ தமது பதவி காலத்தில் பிரான்ஸ் நாட்டின் சிறு சிறு ஊர்களிலும் கலைக்கூடங்களை ஏற்படுத்தி, உலகில் உள்ள பல்வேறு நாடுகளின் உயர்தரக் கலை நிகழ்ச்சிகளைப் பிரான்ஸ் நாட்டுப் பட்டிக்காட்டுப் பாமரனும் பார்த்து அனுபவிக்கச் செய்தார்.

மால்ரோவின் மற்றொரு ருசி—ஆர்வம்—உலக நாடுகளின் பல்வேறு நாகரிகங்களையும், கலாசாரங்களையும் பிரதிபலிக்கும் சிற்பச் சித்திரக் கலைப் பொருள்களைச் சேகரிப்பதும், அவற்றின் வேற்றுமையினிடையே மிளிரும் மனித மனத்தின் ஒற்றுமையை மக்களுக்கு எடுத்துக் காட்டுவதுமாகும். இவ்வகையில் அவர் எழுதியுள்ள விமரிசன நூல்கள் காலஞ் சென்ற ஆனந்த குமாரஸ்வாமியை நினைவூட்டுவனவாக இருக்கின்றன.

அவர் பிரஞ்சு நாட்டினராயினும் ''யாதும் ஊரே யாவரும் கேளிர்'' என்ற தமிழ் மூதுரைக்கு ஒப்ப வாழ்ந்து வருகிறர்.

தாம் தெய்வ நம்பிக்கை இல்லாதவர் என்று சொல்லிக் கொள்வார். ஆனல் மானிடன் பல்வேறு கஷ்ட நஷ்டங்களினிடையே தெய்விக மனிதனாக வாழ முற்படுவதைக் கண்டு வியந்து போற்றி வருபவர். இதை அவர் வெளியிடும் அழகைப் பாருங்கள்:

''மனிதத் தன்மை என்பது 'எந்த மிருகத்தாலும் செய்ய முடியாத கொடுமையை நான் செய்துவிட்டேன்' என்று சொல்லிக் கொள்வதில் இல்லை. 'என்னுள்ளிருந்துகொண்டு கொடுமையைச் செய்யத் தூண்டிய மிருகத்தை எந்தத் தெய்வத்தின் உதவியும் இன்றியே அடக்கி வெற்றி கொண்டேன்' என்று சொல்லிக் கொள்வதில்தான் மனிதனின் சிறப்பிருக்கிறது.''

கெட்டதிலும் நல்லதைப் பார்க்கும் குணமுள்ளவர். இல்லையெனில், ''அணுகுண்டுகளால் அழிந்து போய் விடுவோமோ என்ற பயமானது உலகின் பல்வேறு நாடுகளை ஒன்று சேர்த்திருக்கிறது. இது சரித்திரத்தில் கண்டும் கேட்டுமிராத அதிசயம்! எத்தனை மகா நாடுகள் கூட்டினாலும் சாதிக்க முடியாததை அணுகுண்டு பீதி சாதித்திருக்கிறது'' என்று கூறுவாரா?

சொந்த அனுபவத்தின் மீதுதான் நூல்கள் எழுதியிருக்கிறர். அறைக்குள் உட்கார்ந்து கற்பனையைத் தட்டிவிடுபவரல்ல. இவரது எழுத்தும் செயலும் ஒன்றை யொன்று பின்னி நிற்கும். நல்ல பணி ஆற்ற எத்தகைய ஆபத்தையும் துணிந்து மேற்கொள்வார்.

உலக மக்களிடையே ஒப்புரவு வளர்க்கும் ஒரு கழகம் நிறுவ, தமக்கு அளிக்கப்பட்ட ஒரு லட்சம் ரூபாயையும் வழங்கிவிட்டார்.

அன்புருவமான மனிதர் ஆண்ட்ரு மால்ரோ. அவர் நீடுழி வாழ்க! —சிதா




# இரண்டு பக்கமும் இடி!

எஸ்.வி.எஸ்

சண்டிகரில் வசிக்கும் பஞ்சாபியர் தில்லியிலிருந்து ஒலிபரப்பப்படும் பஞ்சாபி செய்திகளை விட்டு விட்டு பாகிஸ்தானில் உள்ள லாஹோர் நிலையத்தின் ஒலிபரப்பையே கேட்கின்றனர்! அதுதான் அவர்களுடைய காதுகளில் பாரதியார் சொன்னபடி ''தேனுக வந்து பாயுது!'' காரணம் என்ன?

பாரதம் சுதந்திரம் பெறுவதற்கு முன்னுல், பிரிட்டிஷ் ஆட்சியில் — பஞ்சாப் மாகாணம் வடமேற்கே பெஷாவரிலிருந்து டில்லிக்கு பத்து மைல் தூரம் வரை பரவியிருந்தது. அந்நாளில் அந்தப் பெரிய பஞ்சாபில் ஐம்பது சதத்துக்கு மேல் முஸ்லிம்கள். மற்ற மக்கள் சீக்கியரும், ஹிந்துக்களும். பெரும் பணக்காரர்களும், நிலச்சுவான்தார்களும் முஸ்லிம்கள். அவர்கள் படித்தவர்களாகவும், செல்வாக்கு மிக்கவர்களாகவுமிருந்தார்கள். அதனுல் பஞ்சாபில் சீக்கியர், ஹிந்துக்கள் எல்லாருடைய பேச்சும் அராபி, பார்ஸி மொழிகள் பெரிதும் கலந்த பஞ்சாபியாகவே இருக்கும். முஸ்லிம் பண்பாட்டினை ஓரளவு ஹிந்துக்கள், சீக்கியர் வீடுகளிலும் காணலாம்; ஹிந்துக்களும் சீக்கியர்களும் பஞ்சாபி மொழியை உருது லிபியில் எழுதி வந்தனர். ஹிந்துக்களிடை புதிய விழிப்பை ஏற்படுத்த வந்த-வேதகாலப் பண்பாட்டை மீண்டும் நிலை நாட்ட வந்த தயானந்த சரஸ்வதிகூடத் தமது நூல்களையெல்லாம் அராபி லிபியிலேயே எழுதி வெளியிட்டார். வேதங்கள்கூட அரபிலிபியில் எழுதப்பட்டு பிரசுரிக்கப்பட்டு வந்தன. பாகிஸ்தான் பிரிவினைக்குப் பின் பஞ்சாபில் ஹிந்துக்கள் தேவநாகரி லிபி பயிலவும், சீக்கியர்கள் குருமுகி லிபிக்கு ஆதரவு அளிக்கவும் தொடங்கியிருக்கின்றனர். எனினும் இன்றும் பஞ்சாபியர் பேசுவது அராபி, பார்ஸி மொழி கலந்த பஞ்சாபிதான். அகில இந்திய ரேடியோவும் மற்ற சர்க்கார் அலுவலகங்களும் பெரும்பகுதி சம்ஸ்கிருத சொற்கள் கொண்ட செயற்கைப் பஞ்சாபி மொழியைப் பிரபலப் படுத்த முயல்கின்றன. இதைப் பஞ்சாபியரின் செவிகள் ஏற்க மறுக்கின்றன.

முன்பெல்லாம் ''லாஹோர்'' என்றுலே ஒவ்வொரு பஞ்சாபியருக்கும் புது தெம்பு ஏற்படும். இதற்குக் காரணத்தை இன்று சண்டிகரின் பிரதம கட்டிடக் கலை நிபுணரும், உலகப்புகழ் பெற்றவருமான திரு எம். என். சாமா என்ற ஒரு பஞ்சாபி கூறுகிறுர்:

''பஞ்சாபில் அம்ருத்ஸர், பாட்டியாலா, ஜலந்தர் போன்ற வியாபாரத்திலும் வர்த்தகத்திலும் செழிப்பான நகரங்கள் பல இருந்த போதிலும் பஞ்சாபியரின் பண்பாட்டை, கலையை, இலக்கியத்தை பிரதிபலிக்கும் நகரும் லாஹோர்தான். ஆகவே, பாகிஸ்தானுக்கு லாஹோர் போன பின்பு பஞ்சாபுக்கு அரசாங்க நிர்வாகத்துக்குரியதாகவும், லாஹோருக்கு இணையான பஞ்சாபி பண்பாட்டைப் பிரதிபலிப்பதாகவும் இருக்கக் கூடிய ஒரு தலைநகர் தேவைப்பட்டது. அதன் விளைவு சண்டிகர்!''

அன்றைய பாரதப் பிரதமர் நேரு என்ன சொன்னுர் என்பதை நினைவுகூர்வோம்:

''பாரதத்தின் சுதந்திரத்தையும், பழைய புளித்துப் போன பழக்கங்களிலிருந்து நாம் விடுபட்டதையும், உன்னதமான எதிர்காலத்தைப் படைப்பதில் கொண்டுள்ள உறுதியையும் பிரதிபலிப்பதாக இந்த நகரம் அமையட்டும்!''

தில்லியிலிருந்து 150 மைல் தூரத்தில் ஹிமாலயத்தின் தொடர்பான ஷிவாலிக் மலைகளின் அடிவாரத்தில் பரந்த வெளியிடை சண்டிகர் நகர் அமைந்துள்ளது. இங்கு இரண்டு இயற்கையான காட்டாறுகளும், ஓர் ஏரியும் உள்ளன. மலைச் சரிவானதால் மழைத் தண்ணீர் தேங்காமல் அக் காட்டாறுகள் வழியே வெளியேறிவிடவும் நல்ல வாய்ப்பு.



வலது:

- பஞ்சாப் - ஹரியாணு அரசாங்க அலுவலகங்கள்.

எதிர்ப்பக்கத்தில் மேலே:

- மருத்துவத் துறையில் பட்டப் படிப்புக்கு மேற்பட்ட படிப்புத்துறைக் கழகம்.
- பஞ்சாப் - ஹரியாணு - உயர்நீதி மன்றங்கள்.

கீழே:

- சண்டிகரிலுள்ள அற்புத ஏரி.
- சண்டிகரின் அமைப்பை உணர்த்த வரையப்பட்ட சித்திரங்களுள் ஒன்று.





நகர நிர்மாணம் பிரெஞ்சுக் கட்டிடக் கலை நிபுணரான லா கர்போஸயரிடம் ஒப்படைக்கப்பட்டது. அவர் மக்களின் வாழ்க்கை முறையை முதலில் கவனித்தார்.

பஞ்சாப் வெய்யில் காலத்தில் அதிக வெப்பமும், குளிர் காலத்தில் அதிகக் குளிரும் உள்ள பிரதேசம். ஆகவே பஞ்சாபியர் கோடை காலத்தில் வீட்டுக்கு வெளியே திறந்த வெளியில்தான் படுத்து உறங்குவார்கள். குளிர் காலத்தில், வெய்யிலில் குளிர் காய்ந்துகொள்ள வீட்டுக்கு வெளியே இருப்பார்கள். ஆகவே பஞ்சாபியர் வீட்டுக்குள் இருக்கும் நேரத்தை விட வீட்டுக்கு வெளியே இருக்கும் நேரமே அதிகம். எனவே, ஒவ்வொரு வீட்டுக்கும் போதிய திறந்தவெளி இருக்கும் வகையில் கட்டிடங்கள் அமைக்க வேண்டும் என்று தீர்மானித்தார். இது காரணமாகவே சண்டிகரில் பல அடுக்குமாடி குடியிருப்புக்கள் கிடையாது.

அரசாங்க காரியாலயம், நீதிமன்றம், சட்டசபை ஆகியவற்றைத் தலைப் பகுதியாகப் பாவித்து மற்ற மக்கள் வசிக்கும் வீட்டுப் பகுதி உடலமைப்பாக விளங்கும் வகையில் நகரம் நிர்மாணிக்கப்பட்டிருக்கிறது.

நகரம் ஸெக்டர், ஸெக்டராகப் பிரிக்கப்பட்டுள்ளது. ஸெக்டருக்கு—ஒரு பகுதிக்கு—ஓர் எண் கொடுக்கப்பட்டிருக்கிறது. 13 எண் மேனாட்டு வழக்கில் அதிர்ஷ்டமில்லாத எண். அதனால் சண்டிகரில் 13ம் எண்ணுள்ள ஸெக்டர் கிடையாது. சாலையின் வடபுறம் 12வது எண்ணுள்ள ஸெக்டர். அதன் எதிரில் சாலையின் தென்புறம் 14வது ஸெக்டர். 12ம் 14ம் கூட்டினால் 13ஆல் வகுக்கப்படக்கூடிய 26 எண் வரும்! இப்படி எதிரும் புதிருமாகவுள்ள எந்த இரு ஸெக்டர்களின் எண்களைக் கூட்டினாலும் 13 ஆல் வகுக்கப்படக்கூடிய எண் வரும்!

சண்டிகரில் புகை கக்கும் தொழிற்கூடங்களை அனுமதிக்கக் கூடாது என்ற நோக்கத்துடன் இங்கு இதுவரை தொழிற்சாலைகள் வரவில்லை. பரந்த சாலைகளும், சாலையோரத்தில் மரங்களும், பூங்காக்களும் உள்ளன. இயற்கை அன்னை அங்கு கொஞ்சிக் குலாவுவதைப் பார்க்கலாம். வகை வகையான பறவை இனங்கள் சத்தமிடுவதைக் கேட்டு மகிழலாம்.

எவ்வளவோ ஆர்வத்தோடு, உற்சாகத்தோடு ஆரம்பிக்கப்பட்ட இந்த நகரம் இப்பொழுது ஒரு பரிதாப நிலையில் உள்ளது. பஞ்சாப் மாநிலம் ஹரியானாவாகவும் பஞ்சாபாகவும் பிரிந்த பின்னர் தற்சமயம் இரண்டு ராஜ்யங்களின் தலைநகரமாக இயங்கினாலும், இது எந்த ராஜ்யத்துக்குச் சேரவேண்டியது என்பது நிர்ணயமில்லாதிருப்பதால் இரண்டு ராஜ்யங்களும் இதனை அலட்சியப்படுத்துகின்றன. இரண்டு ராஜ்யங்களும் லட்சக்கணக்கான ரூபாய் வாடகைப் பணத்தை இன்னும் தராமலிருக்கின்றன. அதனால் நகர கட்டிடங்கள், முக்கியமாக சர்க்கார் அலுவலகக் கட்டிடங்கள் பழுது பார்க்கப்படாமல் உள்ளன. ஏதோ சரித்திர காலத்துக்கு முற்பட்ட புதைபொருள் இலாக்காவுக்குரிய நகரத்தையும் கட்டிடங்களையும் பார்ப்பது போன்ற உணர்ச்சி எழுகிறது!

'அரசாங்கங்கள் வாடகை தருவதாவது?' என்கிறீர்களா?

பஞ்சாப், ஹரியானா என்று இரண்டு ராஜ்யங்களாகப் பிரிந்தபோது சண்டிகருக்கு இரண்டு ராஜ்யங்களும் போட்டியிடவே சண்டிகரின் நிர்வாகப் பொறுப்பை மத்திய ஆட்சி எடுத்துக் கொண்டு விட்டது. மத்திய ஆட்சி நிறுவனத்துக்கு வாடகை கொடுத்துக் கொண்டு இரண்டு ராஜ்யங்களின் தலைநகர்களும் சண்டிகரில் இயங்கலாம் என அனுமதித்தது. இரண்டு ராஜ்ய தலைமைக் காரி





## முடி வளர!



முடி செழிப்பாக வளர்வதற்கான அரிய மருந்து ஒன்றினைச் சைபீரியா விஞ்ஞானிகள் கண்டுபிடித்துள்ளார்கள்.

'சிலிகான் அங்க'க் கூட்டுப் பொருள்களிலிருந்து தயாரிக்கப்பட்டுள்ள இம்மருந்தை வெள்ளை எலிகளுக்குக் கொடுத்துச் சோதனை செய்ததில், சிறிது கால இடைவெளியில் அவற்றின் ரோமம் ஐந்து மடங்கு அதிகரித்து அவைகள் சடை நாய்க் குட்டிகளைப் போல் ஆகி விட்டன. இந்த மருந்துக்கு "மிவால்" என்று பெயர். கம்பளி ஆடுகளின் ரோமத்தை அதிகரிக்க இப்போது இம்மருந்தைப் பயன்படுத்துகிறார்கள்.

தலையில் வழுக்கை விழுவதைக் கட்டுப்படுத்தவும் இதைப் பயன்படுத்தலாம் என்று விஞ்ஞானிகள் கருதுகிறார்களாம்.

ஆதாரம்: "சோவியத் செய்திகள்" - கண்ணன்

~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~

யாலயங்களும், சட்டசபைகளும், நீதிமன்றங்களும் மத்திய சர்க்காரின் நிர்வாக ஆட்சியுமாகச் சேர்ந்து மூன்று அரசாங்கங்கள் இங்கு இயங்குகின்றன.

சண்டிகரின் நகர நிர்வாகத்தில் உதவிக் கமிஷனராக ஒரு தமிழர் இருப்பது எதிர்பாராத மகிழ்ச்சியையும் சந்தோஷத்தையும் அளித்தது. திரு தேவசகாயம் ஐ.ஏ.எஸ். மிக உற்சாக புருஷர். அவர் நாகர்கோவில்காரராயினும் அவர் சண்டிகரைப் பற்றி பெருமிதத்துடன் பேசினார். அங்கேயே பிறந்து வளர்ந்தவருக்குக் கூட அவ்வளவு உற்சாகம் இருக்குமா என்பது சந்தேகமே. அவர் கூறிய சில விஷயங்கள் என்னை வியப்பில் ஆழ்த்தித் திக்குமுக்காடச் செய்துவிட்டன.

"சண்டிகரில் யாரும் ஆனந்தமாக மனை வாங்கி வீடு கட்டிக் கொண்டு வாழலாம். வீட்டுவரி என்ற பேச்சே கிடையாது! வீட்டு வரியும் கிடையாது, அர்பன் லாண்டு டாக்ஸ் என்ற நகர்ப்புற மனை வரியும் கிடையாது!" என்றார்.

"பட்டப் படிப்புப் படித்தவர்களின் சதவிகிதம் மிக அதிகமாக உள்ள நகரம் சண்டிகர்தான்" என்றார் தேவசகாயம்.

இங்கு இருப்பவர்கள் பெரும்பாலோர் அரசாங்க உத்தியோகஸ்தர்கள், வழக்கறிஞர்கள், கல்லூரிப் பேராசிரியர்கள் ஆதலால் படித்தவர்களின் எண்ணிக்கை மிக அதிகம்.

"இந்தியாவிலேயே மிகக் குறைந்த கட்டணம் வசூலிக்கும் சினிமாத் தியேட்டர்கள் உள்ள நகரம் இதுதான்" என்று மூன்றாவதாக ஒரு போடு போட்டார். இரண்டே வகுப்புக்கள் — ஒன்றரை ரூபாய் வகுப்பு; மூன்று ரூபாய் வகுப்பு. நான்கு தியேட்டர்கள் உள்ளன. ஏர்-கண்டிஷன் செய்யப்பட்ட தரமான தியேட்டர்கள்!

நான் சண்டிகர் சென்ற மறுநாள் ஞாயிறு: ஒரு தியேட்டரில் தமிழ்ப் படம் காலை 8-30 மணிக்குப் போட்டார்கள். தியேட்டர் நிரம்பி விட்டது! அத்தனை தமிழர்கள் எங்குதான் இருந்தார்களோ என்று வியக்கும்படி அங்கு குழுமிவிட்டார்கள். பெரும்பாலோர் அங்குள்ள விமானதளத்தில் பணியாற்றுபவர்கள். அங்கும் தமிழ் நாட்டில் உள்ள தி.மு.க.-அ.தி.மு.க. மாற்சரியங்கள் தமிழர்களிடையே அவ்வப்போது தலைகாட்டுகின்றன என்று சொன்னார் ஒரு நண்பர். தமிழன் எங்கிருந்தால் என்ன, அவன் தமிழன்தானே என்று நினைத்துக்கொண்டேன்.

தமிழ் மன்றம் ஒன்றுள்ளது. சண்டிகரில் அதன் ஜீவநாடியாக இயங்கி தமிழ்க் கலை, சங்கீதம், இலக்கியம் ஆகியவற்றைப் பேணி வருகிறார் திரு மணிவண்ணன். அவர் ஒரு ரசாயன இன்ஜினியர். பல ஆராய்ச்சிக் கட்டுரைகள் எழுதித் தமது துறையில் நல்ல பெயர் எடுத்திருக்கிறார். எனினும் ஆண்டாள் பிறந்த மண்ணிலிருந்து — ஸ்ரீவில்லிபுத்தூரிலிருந்து — வருபவராதலால் தனியானதோர் தமிழ்ப் பற்றும், சௌலப்யமும் அவரிடம் சுடர் விடுகின்றன!

சண்டிகரில் மற்றொரு உயர் அதிகாரியான திரு சுந்தரம் ஐ.ஏ.எஸ். அவர்களைச் சந்தித்தேன். அவர் ஹரியாணா அரசாங்கத்தில் பணியாற்றி வருகிறார். பல ஆண்டுகள் ஹரியாணா பகுதியிலே வாழ்ந்து பணியாற்றியிருக்கிறார். அவர் அம்மக்களின் இயல்புகளையும் பண்புகளையும் மிக நுட்பமாக அறிந்திருப்பதால் ரஸமாகப் பல விஷயங்களைச் சொன்னார்.

பஞ்சாப் மாநிலம் — பஞ்சாப், ஹரியாணா என்று — இரு கூறாகப் பிரிவதற்கு முன்னால் ஹரியாணா பகுதி மக்கள் தாங்கள் பேசுவது பஞ்சாபியானாலும், தாய்மொழி பஞ்சாபியல்ல; ஹிந்தி என்று சொல்லி வந்ததால் சீக்கியர்கள் கோபமுற்றுத் தங்கள் மொழியையும் லிபியையும் வளர்த்துக் கொள்ள பஞ்சாபி சுபா கேட்டுப் பிரிந்து போனார்கள் என்பதுதான் பொதுவாக யாரும் அறிந்த விஷயம். திரு சுந்தரம் உண்மை நிலவரத்தை விளக்கினார்.

"ஹரியாணாப் பகுதி மக்கள் உண்மையில் ராஜஸ்தானத்தையும், உத்தரப் பிரதேசத்தையும் சேர்ந்தவர்கள். வீரம் செறிந்த மக்கள். 1857 சிப்பாய் கலகத்தின்போது அவர்கள் பெருந் தொல்லை கொடுத்தனர் என்று அவர்களைத் தண்டிக்கும் வகையில் அந்நாளில் பிரிட்டிஷார், முஸ்லிம்களும் சீக்கியர்களும் உள்ள பகுதியில் சேர்த்துவிட்டனர். ஆகவே ஹரியாணா மக்கள் பிரிட்டிஷார் தண்டனை காரணமாகப் பஞ்சாபியரானரே தவிர, அவர்கள் பண்பாடு முதலியவை உத்தரப் பிரதேசத்தையும் ராஜஸ்தானத்தையும் சேர்ந்ததாகத்தான் இருக்கிறது. மிக எளிய மக்கள். பெரும்பான்மையோர் சைவ உணவுப் பழக்கம் உள்ளவர்கள்" என்றார்.

பஞ்சாபியரின் பிரதிநிதியாக ஒரு பிரமுகரைப் பார்க்க எண்ணியபோது நண்பர்,
~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~

# இதோ மஞ்சுளாவிடம் காணுவீர்!

# நீங்கள் பெற விரும்பும் அழகு

''என்றென்றும் நான் லக்ஸ் ஸுப்ரீம் போன்ற ஒரு சோப்பைப் பற்றியே கனவு கண்டு கொண்டிருந்தேன். வளமான, செழுமையான க்ரீம் இணைந்த நுரையும், மயக்கும் அதன் ப்யூடி க்ரீமின் மென்மையான ஸ்பரிசமும் என் சருமத்தை மிருதுவாகவும் பட்டுப் போன்றும் இருக்க வைக்கிறது. அதன் நறுமணமோ, மெய்மறக்கச் செய்கிறது'




## லக்ஸ் ஸுப்ரீம்

இந்துஸ்தான் லீவர் லிமிடெடின் தரமான தயாரிப்பு

HLLS-7703 A



சென்னை, யுனைடெட் கமர்ஷியல் பாங்க் கோடவுன் இன்ஸ்பெக்டர் திரு T. சிவசுப்பிரமணியன் அவர்கள் புதல்வன் Dr. S. திருமகிழ்மாறன், M. B. B. S.க்கும், நாகர்கோவில் ஆறுமுகத் தங்க மாளிகை உரிமையாளர் திரு A. சுப்பிரமணிய பிள்ளை அவர்கள் புதல்வி அருணா குமாரிக்கும் நாகர்கோவில் வடிவீஸ்வரத்தில் அண்மையில் திருமணம் நடைபெற்றது.

வாழ்க மணமக்கள்!



# அருள்மிகு தண்டாயுதபாணி சுவாமி திருக்கோவில், பழனி

## வேண்டுகோள்

இத்திருக்கோவில் திருமலை யானைப்பாதையில் கல் தளவரிசை ரூ. 2,00,000/- மதிப்பீட்டில் அமைத்திட உத்தேசிக்கப்பட்டுள்ளது. அதற்கென சுமார் 10 அடி நீளம் கருங்கல் தளவரிசை (சுமார் 160 சதுர அடி) போட ரூ. 750/- செலவாகும். உபயமாய் செய்ய விரும்பும் சேவார்த்திகள், போட வேண்டிய அளவுக்குத் தக்கவாறு உபயத் தொகையினை "துணை ஆணையர் – நிர்வாக அதிகாரி, அருள்மிகு தண்டாயுதபாணி சுவாமி திருக்கோவில், பழனி" என்ற முகவரிக்கு அனுப்பி வைக்கும்படி கேட்டுக் கொள்ளப்படுகிறார்கள். உபயதாரர் பெயர் பக்கச் சுவற்றில் பொறிக்கப்படும் என்றும் தெரிவித்துக் கொள்ளப்படுகிறது.

துணை ஆணையர் - நிர்வாக அதிகாரி

ஸர்தார் குருநாம் சிங்கிருக்கு ஃபோன் செய்து என் விருப்பத்தைத் தெரிவித்தார்.

மறுநாள் காலை 8—30 மணிக்கு தமது வீட்டில் காலை ஆகாரத்துக்கே வந்துவிடுமாறு ஸர்தார் குருநாம் சிங்ஜீர் அழைப்பு விட்டார்.

ஸர்தார் குருநாம் சிங்ஜீர், பஞ்சாப் உயர் நீதி மன்றக் கிரிமினல் வழக்கறிஞர். முன்னுளில் பிரதமர் கெய்ரோனின் செயலாளராகவும், பொதுஜனத் தொடர்பு அதிகாரியாகவும் பணியாற்றி யிருக்கிறார். அவருக்குக் கதைகள் புனைவதில் தனி ஆர்வம். பல கதைப் புத்தகங்கள், நாவல்கள் பஞ்சாபி மொழியில் எழுதி வெளியிட்டிருக்கிறார். அவருடைய ஆங்கில நூலொன்றைப் பஞ்சாப் பல்கலைக் கழகம் வெளியிட ஏற்றுக் கொண்டிருக்கிறது. தற்போது அவரிடம் வந்த கிரிமினல் வழக்குகளை ஆதாரமாகக் கொண்டு சுமார் 20 கதைகள் புனையத் திட்டமிட்டிருக்கிறார். சிலவற்றை ஏற்கெனவே எழுதிவிட்டார். இரண்டொரு கதைகளை எனக்குச் சொல்லி என் முகபாவங்களைக் குறித்துக் கொண்டார்!

பல விஷயங்களில் தீவிர உணர்ச்சி மிக்கவராக இருந்தார். அவருடைய ஒரே ஒரு கருத்தை மட்டும் இங்கு குறிப்பிட விரும்புகிறேன்.

இந்த ஆண்டு கோதுமை விளைச்சல் பஞ்சாபில் குறைந்துள்ளது. இதற்குக் காரணம் முதல் மந்திரி செயில் சிங்தான் என்கிறார் இவர்.

''செயில் சிங் தச்சருடைய புதல்வர். தச்சருடைய புதல்வருக்கு விவசாயத்தைப் பற்றி என்ன தெரியும்? விவசாயியின் கஷ்டசுகங்கள், தேவைகள் பற்றி என்ன தெரியும்? கெய்ரோன் விவசாயி குடும்பத்தைச் சேர்ந்த ஜாட். அவர் காலத்தில் விவசாயிகள் கஷ்டத்தை உணர்ந்து வேண்டியதைச் செய்தார். விவசாயம் பெருகியது...'' என்று உணர்ச்சி வசமாகப் பேசினார்.

* * *

இயற்கையில் எத்தனையோ அதிசயங்கள். ஒரு கல்லைப் பார்த்தால் மாட்டுத் தலைபோல் தெரியும். இன்னொரு கல்லைப் பார்த்தால் யானையின் தலைபோல் தெரியும். இப்படி தூர விட்டெறியும் பொருள்களில் பல விந்தைகள் காண்கிறோம். இவற்றை யெல்லாம் தொகுத்து ஓர் அதிசய உலகத்தைச் சிருஷ்டித்திருக்கிறார் ஒரு தனி மனிதர் — நேக்சந்த் என்ற ஒரு சாலைப் பரிசோதகர். அவர் சண்டிகர் சிருஷ்டிக்கப்பட்ட நாளிலிருந்து பணியாற்றி வருவதால் விடாப்பிடியாக, பொறுமையாக இந்த அதிசய உலகைச் சிருஷ்டித்துள்ளார். அவருடைய முயற்சியை எவ்வளவு பாராட்டினாலும் தகும்.

எத்தனையோ அனுபவங்களைச் சண்டிகரில் பெற்றாலும் நண்பர் இரு சுந்தரம் சொன்ன ஒரு விஷயம்தான் அனைத்திலும் அழுத்தமாக மனத்தில் பதிந்தது. அது: பாரத நாட்டிலேயே மிக சுபிட்சமான மாநிலம் பஞ்சாப் தான். ஆனால் இங்கு சர்க்கார் துறை தொழிற்கூடம் ஒன்றுகூடக் கிடையாது!

## அமீர் கரீப்

இன்னின்னாரைப் போட்டுப் படம் எடுத்தால் படம் ஓடிவிடும் என்ற நம்பிக்கையில் உருவான படம் அமீர் கரீப். ஓடிவிடவேண்டிய படம்தான்!

கள்ளக் கடத்தலுக்கும் கடுஞ் செயல்களுக்கும் விரிவான களன் கூட்டி, அடி-தடி, தூக்குதலை நீட்டி முழக்கிக் கதைபண்ணி விட்டார்கள். இப்படிக் கதை பண்ணும் கதாபாத்திரங்களாக வந்து வந்து பழகியவர்கள் தேவ் ஆனந்த், ஹேமமாலினி போன்றவர்கள். தேவ் ஆனந்த் தமக்கே உரிய ஒரு சாய்வு நடையையும் பேசும் வகையையும் பயன்படுத்துகிறார் என்றால், 'என் உதடுகளுக்குத் தெரியாதா என் நடிப்பு? அது போதுமே' என்று ஒப்பேற்றுகிறார் ஹேமமாலினி. பிரேம்நாத் வில்லனாகத் தோந்து தமது பழக்க தோஷத்தை மறக்கவில்லை என்பதை நினைவுபடுத்துகிறார்.

நடனம் 'உட்காரு, எழுந்திரு' பயிற்சியை நன்றாக கற்றுத் தருகிறது. நீர்ப்பனுடைக் காட்சி உள்பட.

நீதிமன்றக் காட்சி ஒன்றுக்கு வழிவகுத்து அதிலே குற்றவாளிக் கூண்டில் நிற்பவனைப் பெரும் சொற்பொழிவாற்ற விடுகிறார்களே, இப்படி எந்த நீதிமன்றத்தில் நடக்கும்?

'அடுத்த வீட்டுச் சமையல் அமர்க்களமாயிருந்தது. நாமும் அதே மாதிரிச் செய்வோமே!' என்பது போல வரும் திரைப்படங்கள் அனந்தம்.
அந்த அனர்த்தத்தில் விளைந்ததுதான் 'அமீர் கரீப்'. — ரா. வீ.



செயின்ட் ஜோன் உயர்நிலைப் பள்ளி.

மதர் தெரஸா கணக்கு வகுப்பு எடுத்துக் கொண்டிருந்தாள். தலையில் நரை முடியும் நெற்றி எங்கும் சுருக்கங்களும் உடைய தெரெஸா அந்தப் பள்ளிக்கூடத்தைச் சேர்ந்த கன்னி மாடத்தில் பிரவேசித்தபோது வயது பதினேழு. இந்த முப்பத்திமூன்று ஆண்டுகளாகப் படிப்பு, போதனை, ஜபம் இவற்றைத் தவிர வேறு எதுவும் தெரியாதவளாக இருந்து விட்டாள்.

சிக்கலான ஒரு கணக்கைக் கரும் பலகையில் போட்டு முடித்த தெரெஸா வகுப்பு முழுவதும் தன் பார்வையை ஓட விட்டாள். எல்லாப் பெஞ்சுகளிலும் மாணவிகள் குனிந்த தலைகளோடு பலகையைப் பார்க்க மட்டும் அவ்வப்போது திருப்பி, அந்தக் கணக்கைத் தங்கள் நோட்டுப் புத்தகங்களில் பதியவைத்துக்கொண்டிருந்தனர். ஆனால் கடைசி பெஞ்சில் இருந்த நித்யா மட்டும் குனிந்தபடி என்ன செய்து கொண்டிருக்கிறாள்?

தெரெஸா மெதுவாகத் தன் இருப்பிடத்தை விட்டு நகர்ந்தாள். அடிமேல் அடி வைத்துக் கடைசி பெஞ்சை நெருங்கினாள். ஆசிரியை வருவதை நித்யா சற்றும் கவனிக்கவில்லை.

''அப்படி மும்முரமாக என்ன படிக்கிறாய், நித்யா?'' என்ற தெரெஸாவின் குரல் கேட்டுத் திடுக்கிட்ட நித்யா எழுந்து நின்றாள்.

''ஒன்றுமில்லை... மதர் ... ஒன்றுமில்லை!''

தெரஸா அவள் கையிலிருந்த புத்தகத்தைப் பற்றிவிட்டாள். திரைப்படச் செய்திகளுக்காக நடத்தப்படும் பிரபலமான சினிமாப் பத்திரிகையின் அந்த மாதப் பிரதி அது.

''நித்யா! வகுப்புக்கு வெளியே நில்!''

தெரெஸாவின் கண்டிப்பு நித்யாவுக்குத் தெரிந்ததுதான். இருந்தாலும் ''ஸாரி, மதர்!'' எனத் தயங்கினாள்.

''ஐ ஸே, கெட் அவுட்!'' என்றாள் தெரஸா. அவள் குரல் உயர்ந்த சுருதியில் ஒலித்தது.

மேலே ஏதும் பேசாமல் நித்யா நகர்ந்தாள். ''இடைவேளையின்போது என் அறையில் வந்து என்னைப் பார்!'' என்றாள் தெரெஸா.



வகுப்பு முடிந்தது. அடுத்து வேறு வகுப்பு தெரெஸாவுக்கு இல்லை. அந்தப் புத்தகத்தைக் கையில் எடுத்துக் கொண்டு தன் அறைக்குப் போனாள். கையில் இருந்த புத்தகத்தை மேஜை மேல் போட்டுவிட்டுச் சாய்வு நாற்காலியில் அமர்ந்தாள். அவள் பார்வை அந்தப் பத்திரிகையின் அட்டையில் விழுந்தது.

அங்கே காட்சியளித்த அந்த நடிகை — கவர்ச்சிகரமான உடையில் புன்முறுவலித்த பெண்ணின் முகம் எங்கோ பார்த்தது போல் தெரிந்தது. புஸ்தகத்தைப் புரட்டிப் பார்த்தாள். பெயர் சோபனா என்று போட்டிருந்தது. அப்படி யாரும் தெரிந்தவர்கள் இல்லை. இந்தப் பெண் யாரைப் போல் இருக்கிறாள்?... தெரெஸா யோசனை செய்தாள். ''அப்படியும் இருக்குமோ?''

பத்து வருஷங்களுக்கு முன்னால் ஒரு நாள் பத்தாம் வகுப்பு என்று தெரெஸாவுக்கு ஞாபகம். அவள் அந்த வகுப்பின் ஆசிரியையாக இருந்தாள். ஒரு பெண் தன்னுடைய பேனா காணாமற் போய்விட்டதாகப் புகார் செய்தாள். தெரெஸா ஒவ்வொரு பெண்ணினுடைய பையையும் பரிசோதித்தாள். அந்தப் பெண், மங்கை என்னும் பெயருடையவள், தெரெஸாவைக் கண்டதும் நடுங்கினாள். அந்தப் பெண்ணின் பெட்டியைத் திறந்ததும் அந்தப் புதிய பேனா அவள் கண்களில் பட்டது.

கண்களில் நீர் ததும்ப நின்ற அந்தப் பெண்ணைப் பார்த்ததும் என்றுமில்லாத அதிசயமாகத் தெரெஸாவுக்கு கனிவு பிறந்தது. பேனாவை அங்கு பார்த்ததாகக் காட்டிக் கொள்ளவில்லை.

''இந்த வகுப்பில்தான் யாரோ அந்தப் பேனாவை எடுத்திருக்கிறார்கள். யார் என்று எனக்குத் தெரியும். பகல் இடைவேளையின் போது பேனா என்னிடம் வரவேண்டும். இல்லாவிட்டால் நான் பொல்லாதவளாக இருப்பேன்!'' என்று அதட்டிவிட்டுப் போனாள்.

அந்தப் பெண் — மங்கை — இடைவேளையின் போது தயங்கியபடியே அந்தப் பேனாவைத் தெரெஸாவிடம் நீட்டினாள். தெரெஸா பார்த்த பார்வையைக் கண்டு நடுங்கினாள்.

''ஏன் எடுத்தாய், சொல்!'' என்று தெரெஸா அதட்டினாள்.

''இந்தப் பேனா கவர் எனக்குப் பிடித்திருந்தது. எங்கள் வீட்டில் இப்போது கேட்டால் வாங்கித் தரமாட்டார்கள்.... தப்புதான் மதர்...! தெரியாமல் செய்து விட்டேன்!'' என விம்மினாள் அந்தப் பெண்.

''செய்வதைச் செய்து விட்டு அழுதுவிட்டால் ஆயிற்றா?... நாம் எல்லாம் பெண்ணாகப் பிறந்தவர்கள். ஆசைப்பட்டதெல்லாம் கிடைத்துவிடும் என்று எதிர்பார்க்கக் கூடாது.. ஒரு பொருளை நியாயமான வழியில் நேர்மையான முறையில் பெற முயல வேண்டும். எப்படியாவது சம்பாதித்துவிட வேண்டும் என்ற ஆசை வரலாமா? இந்தப்

பேனுவை வைத்துக் கொண்டு நிம்மதியாக ஒரு நாள் எழுத முடியுமா? ஒவ்வொரு முறையும் இது திருடிய பொருள் என்ற நினைவு உனக்கு இருக்காதா?'' என்று கேட்டாள்.

''ஆமாம்...மதர்... எனக்கு நன்ருகப் புரிகிறது. இனி இப்படி நடக்கவே மாட்டேன்'' என்று உறுதியாகச் சொன்னுள் மங்கை.

''சரி, சரி, போ!'' என்று அவளை அனுப்பி வைத்தாள் தெரேஸா. செய்த குற்றத்துக்காகத் தண்டனை தராமல் அனுப்பிவிட்ட ஒரே ஒரு சம்பவம் அது. அந்த மாணவியின் முகச் சாயல் இந்த நடிகையின் முகத்தில் தெரிகிறதே!

தெரேஸாவின் அறை வாசலில் நிழலாடியது. நித்யாதான்.

''வா! இந்தப் புத்தகத்தை நீ வகுப்பில் படித்துக் கொண்டிருப்பதை உன் அப்பாவுக்கு போன் பண்ணிச் சொல்லட்டுமா?'' என்று கேட்டாள் தெரேஸா.

''வேண்டாம், மதர்... ப்ளீஸ்... நான் இந்தப் புத்தகத்தைப் பிரித்துக்கூடப் பார்க்க மாட்டேன்...எங்கம்மாதான் சொன்னுங்க... இந்த ஸ்டார் சோபஞ நம்ம பள்ளிக்கூடத்திலே படிச்சவங்கதான்..... மங்கைன்னு பேராம்.... அம்மாவுக்கு நல்லாத் தெரியுமாம்'' என்ருள். தெரேஸா நிமிர்ந்து உட்கார்ந்தாள். அவள் ஊகம் சரிதான்.

''உன் அம்மாவும் இன்னும் குழந்தையாகத்தான் இருக்கிருள். பெற்ற பெண்ணிடம் என்ன பேசுவது, எதைப் பற்றிச் சொல்வது என்று இன்னும் தெரியவில்லை'' எனப் பொய்க் கோபத்துடன் அதட்டினுள் தெரேஸா.

நித்யா போன பிறகு தெரேஸா அந்தப் படத்தைக் கையில் எடுத்துப் பார்த்தாள்.



பூமியைப் (ஆதிசேஷன்) பாம்பு சுமப்பதாகப் பாரதத்தில் ஒரு நம்பிக்கை உண்டு. ஜப்பானில் சிலந்தி; மங்கோலியாவில் பன்றி; தென்னமெரிக்காவில் திமிங்கிலம்; வட அமெரிக்காவில் ஆமை!

தகவல்: ராகன். ஆதாரம்: நிலாவபூமி

---

''எத்தனை அழகாக வளர்ந்து விட்டாள்... கைநிறையச் சம்பாதிப்பாள். நம்மை ஞாபகம் வைத்துக் கொண்டிருக்கலாம், இல்லையா?'' என நினைத்த தெரேசா எழுந்து உணவு விடுதிக்கு மெல்ல நடந்தாள்.

**ம**றுநாள் ஆசிரியைகளின் கூட்டம். மதர் கபீரியர் மிகக் கவலையுடன் காணப்பட்டாள். போன வருஷம் ஒன்பதாம் வகுப்பு முதல் பதினோராம் வகுப்பு வரை மூன்று செக்ஷன் திறக்க அரசு அனுமதித்திருந்தது. ஒரு வருடத்துக்குள் வகுப்புகளுக்குத் தேவையான கட்டடம் கட்ட வேண்டும் என்பது முக்கிய நிபந்தனை. கட்டடம் அரைகுறையாக இருந்தது. கட்டி முடிக்கக் குறைந்தது பத்தாயிரம் ரூபாய் தேவை.

''எப்படியாவது நாம் அந்தப் பணத்தைத் திரட்ட வேண்டும்!'' என்றாள் மதர் கபீரியர்.

''நாடகம் நடத்தலாம், நாட்டியக் கச்சேரி வைக்கலாம்'' என்று பலதரப்பட்ட யோசனைகள் சொல்லப்பட்டன.

''அதற்கெல்லாம் அதிகம் அலைய வேண்டும். டிக்கட்டு விற்கத் தெருத் தெருவாகப் போக வேண்டும். கான்வென்டைச் சேர்ந்த நம் பெண்களை அப்படியெல்லாம் நாம் அனுமதிக்க இயலாது!'' என மறுத்துவிட்டாள் மதர் கபீரியர்.

தெரேசா தன் யோசனையைச் சொன்னாள். மங்கையைப் போய்ப் பார்ப்பது; அவள் இருக்கும் நிலைமைக்கு இந்தப் பத்தாயிரம் சர்வ சாதாரணம்.

''அவளிடம் யார் போய்க் கேட்பது?''

''நானே போகிறேன்!'' என்று முன்வந்தாள் தெரேசா. ''என்னிடம் அவளுக்கு ஒரு மதிப்பு உண்டு. நிச்சயம் உதவுவாள்!''

தெரேசாவும் இன்னொரு சக ஆசிரியையுமாக மங்கையின் வீட்டுக்கு வழி விசாரித்துக் கொண்டு புறப்பட்டார்கள். அவள் பங்களா முன் இரண்டு கார்கள் நின்றன.

வாசலில் இருந்த கூர்க்கா அவர்களை முதலில் உள்ளே விட மறுத்தான். ''அம்மாவின் டீச்சர்'' என்று கேள்விப்பட்டதும் அரை மனத்துடன் சம்மதித்தான். முன் ஹாலில் ஒரு சோபா போடப் பட்டிருந்தது. அதில் அமர்ந்த தெரேசாவின் முன் ஒரு பெண் ஒரு சீட்டைக் கொடுத்து, பெயர், மற்ற விவரங்களை எழுதித் தரச் சொல்லிக் கேட்டாள். தெரேசா தன் பள்ளியின் பெயர், தன் பெயர், வந்த நோக்கம் ஆகியவற்றைச் சுருக்கமாகக் குறித்துக் கையெழுத்திட்டுக் கொடுத்தனுப்பினாள். போன பணிப்பெண் ஐந்து நிமிஷங்களில் திரும்பி விட்டாள்.

''உங்களை அவங்களுக்குத் தெரியாதாம். இப்போப் பார்க்கச் சௌகரியப்படாதுன்னு சொல்லச் சொன்னாங்க!'' என்றாள் அந்தப் பணிப் பெண்.

தெரேசாவுக்கு இது பேரதிர்ச்சியாகப் பட்டது. பார்க்கக்கூடவா மறுத்து விட்டாள்? கூட வந்த ஆசிரியை என்னமோ போல் பார்த்தாள்.

''இந்தச் சீட்டைப் பார்க்கவில்லையா?'' என்று ஆதங்கத்துடன் கேட்டாள் தெரேசா.

''பார்த்தாங்க, பார்த்தாங்க... அவுங்க ஒங்க பள்ளிக்கூடத்திலே படிக்கவே யில்லையாம்.... நீங்க யாருன்னு தெரியல்லியாம். இப்போ அவுங்க வெளியே புறப்படற சமயம். தொந்தரவு பண்ணாதீங்க அம்மா... என்னைத்தான் ரொம்பக் கோபிப்பாங்க...'' எனக் கூறினாள் அந்தப் பெண்.

தெரேசாவின் உடல் நடுங்கியது. எத்தனை பெரிய அவமானம்? மங்கை அவளை மறக்கவில்லை. பழைய சம்பவத்தை நினைத்துக் கொண்டு பழிவாங்கி விட்டாள்!

**ப**ள்ளிக்குத் திரும்பிய தெரேசா தேவாலயத்தில் சரணடைந்தாள். பற்றற்று வாழ வேண்டிய அவள் தகுதியற்ற இடத்தில் வைத்த நம்பிக்கை பொய்த்துப் போனது பற்றி எண்ணி எண்ணி மறுகினாள். தன்னை மன்னிக்க வேண்டினாள்.

பிரார்த்தனை முடிந்து தன் அறைக்குத் திரும்பிய தெரேசாவிடம் ஒரு பெரிய பார்சலைக் கொடுத்தாள் பள்ளியின் ஆயா.

''யாரோ பெரிய காரிலே வந்தாங்க... கார் டிரைவர் உங்ககிட்ட கொடுக்கச் சொல்லித் தந்து போனாருங்க... யாரோ சோபனா தந்ததாகச் சொன்னாருங்க...''

தெரேசா அதைத் தொடக் கூசினாள். மறுத்துவிடலாமா? பள்ளிக்கு வந்ததை மறுக்க அவள் யார்?

அந்தப் பார்சலைப் பிரித்தாள் தெரேசா. மேலாக அவள் பெயருக்கு ஒரு கடிதம் இருந்தது. முத்து முத்தான அந்தக் கையெழுத்து மங்கையினுடையதுதான்.

''என் மதிப்புக்கும் மரியாதைக்கும் என்றும் உரிய மதர் அவர்களுக்கு, மங்கை அடிபணிந்து எழுதுவது:

என் வீடு தேடி நீங்கள் இன்று காலை வந்தீர்கள். புனிதமான தங்கள் திருப்பாதங்கள் என் மனையை அலங்கரித்ததற்கு நான் பூரிப்பு அடைந்திருக்க வேண்டும். மாறாக நான் வேதனைப்பட்டேன், மதர்! வெட்கப்பட்டேன்.

என்னை நீங்கள் பார்க்கக் கூடிய நிலையில் நான் இன்று இல்லை. உங்கள் பார்வை படக் கூட லாயக்கற்றவள் நான். மாசு படர்ந்த என் வீட்டில் தாங்கள் தங்கும் ஒவ்வொரு கணமும் தங்கள் புனிதத்துக்கு இழுக்கு என்று தான் அவசரம் அவசரமாக அனுப்பினேன்.

இத்துடன் அனுப்பப்பட்ட பணம் என் குடும்ப நகைகளை விற்று வந்தது. என் தந்தையும் பாட்டனாரும் நெற்றி வியர்வை நிலத்தில் விழ உழைத்துச் சேர்த்த பணம் இது. என் பாபக் கரங்கள் சேர்த்த பணம் அல்ல. நான் படித்த புனித ஆலயத்துக்கு என் காணிக்கையாக இதைச் சமர்ப்பிக்கிறேன்.

தங்களைப் பணியக்கூட அருகதையற்ற
உங்கள் அன்பு மாணவி
மங்கை.''

மதர் தெரேசா தன் கண்களில் துளித்த நீரைத் துடைத்தெறிந்தாள்.

# குவாலியர் ரேயானின் மகத்தான 26 ஆண்டு காலப் பணி



## தன்வலிமை பெறும் கனவை நனவாக்கி வரும் பணி.

ரேயான் துணிகள், ஸ்டேபிள் இழை, ரேயான்-கிரேடு பல்ப் (கூழ்), ரேயான் ஸ்டேபிள் நூலிழைத் தொழிற்சாலைகளுக்கான எந்திர சாதனங்கள் ஆகிய எல்லாவற்றையும் நம் நாட்டிலேயே உற்பத்தி செய்து கொள்வதற்கென குவாலியர் ரேயான் செய்துவரும் முயற்சிகள், நாடு சுதந்திரம் எய்திய நாளிலேயே தொடங்கிவிட்டன.

மூங்கில் மற்றும் இதர கெட்டி மரங்களிலிருந்து கரை திறனுள்ள ரேயான்-ரகக் கூழ் தயாரிப்பு, மற்றும் ரேயான், பல்ப், இவை சார்ந்த தொழிற்சாலைகள் ஆகியவற்றுக்கான நுட்பகரமான எந்திர சாதனங்களின் உற்பத்தி முதலியவற்றிலே குவாலியர் ரேயான் முன்னோடியாக விளங்குவதாலும், ரேயான் தொழிலிலே நம் நாடு தன்வலிமை பெற வழியமைத்துள்ளது.

இன்று, குவாலியர் ரேயானின் ஸ்டேபிள் நூலிழை உற்பத்தியளவு, 520 லட்சம் பேருக்கு ஆடை வழங்கப் போதுமானதாக உள்ளது. மரக் கூழ் உற்பத்தியோ, ஆண்டு தோறும் ஒரு லட்சம் டன்களுக்கு மேல்; இது செல்லுலோஸ் இழையளவிலே கணக்கிட்டால், 5.2 லட்சம் பருத்தி பேல்களுக்கு ஈடாகும்.

கடந்த பத்தாண்டுகளில், குவாலியர் ரேயான் நம் நாட்டின் பொக்கிஷத்திற்கு, வரிகளும் தீர்வைகளுமாக ரூ. 90 கோடி செலுத்தியுள்ளதோடு, அதே காலத்தில் ரூ. 360 கோடி அன்னியச் செலாவணியை மிச்சப்படுத்தியுள்ளது; இதை நோக்கும்போது, தன்வலிமை வாய்ந்த பொருளாதார அமைப்புக்கு குவாலியர் ரேயான் செலுத்திவரும் மகத்தான பணியின் பெருமை தெளிவாக விளங்கும்.

**குவாலியர் ரேயான்—**

**தேச முன்னேற்றமே முதன்மை எனக் கருதுவோர்.**

தி குவாலியர் ரேயான் ஸில்க் மானுபாக் (வீவிங்.) கோ. லிட்., பிர்லாகிராம், நாக்தா (ம.பி.)




## 21. சந்தேக நோய்

மூன்றின நாள் இரவு பத்து மணிவாக்கில் கருணாகரன் தமது வீட்டை அடைந்து கதவைத் தட்டியதும் மதுரம் வந்து கதவைத் திறந்தாள்.

உடனே வார்த்தைகள் வெடித்து வெளி வந்துவிட்டன.

''சிங்காரம் வந்தானா?'' என்று கேட்டு விட்டார்.

''வந்தாரே. ஒரு புத்தகம் வாங்க வந்தார்'' என்றாள் மதுரம், அமைதியாக. அவளுடைய பார்வை, வேறு திசையில் திரும்பியிருந்தது. அவரைப் பார்க்கத் தெம்பில்லாதவளைப் போல் தோன்றியது.

''இப்போதுஎன்னஅவசரமோ, புத்தகத்துக்கு?'' என்று முனகினார். ஓரக் கண்ணால் அவளைப் பார்த்தார்.

வெளிநாட்டுப் பௌடரின் நெடி வீசிக் கொண்டிருந்தது. கருணாகரனின் மனம் பற்றி எரிந்தது. ஒன்றும் பேசாமல் கட்டிலில் படுத்துவிட்டார். இரவு முழுதும் தூங்கவே இல்லை. மதுரம் நிம்மதியாகத் தூங்கினாள். நடுஜாமத்தில் கருணாகரன் படுக்கையிலிருந்து எழுந்து அறையை ஆராய்ந்தார். சொந்த வீட்டில் ஒரு திருடனைப் போல் பதுங்கிப் பதுங்கி ஒவ்வோர் இடத்தையும் ஆராய்ந்தார். படுக்கை, கொடியில் கிடந்த சேலை, குளியல் அறை, சோபா எல்லாவற்றையும் நுணுக்கமாக ஆராய்ந்தார். திடீரென்று ஏதோ சந்தேகப்பட்டவராய்க் குனிந்து மிக நெருங்கி அவளுடைய முகத்தை உற்றுப் பார்த்து ஆராய்ந்தார். ஏதோ சாட்சியங்கள் இருப்பது போலவும் தோன்றின, இல்லாதது போலவும் தோன்றின. ஏற்கவும் முடியாமல் தள்ளவும் முடியாமல் தத்தளித்தார். ஆனால் ஒன்றை மட்டும் அவரால் ஒதுக்கித் தள்ள முடியவில்லை.

வெளிநாட்டுப் பௌடரின் நெடி எப்படித் தலையணையில் வந்தது ?

தலையணையை எடுத்துப் பல முறை முகர்ந்து பார்த்தார். அதே நெடி ! மூக்கை அரிக்கும் நெடி !

கருணாகரன் ஒரு முறை தும்மினார். அந்தச் சத்தத்தில்கூட மதுரம் விழித்துக் கொள்ளவில்லை. அயர்ந்து தூங்கிக் கொண்டிருந்தாள்.

காலையில் அவளையும் மீறிச் சொல்லிவிட்டார்: ''இனி சிங்காரத்திடம் புத்தகம் ஒன்றும் வாங்க வேண்டாம். அவன் இங்கு வரவேண்டியதில்லை.''

இதைக் கேட்டதும் மதுரம் ஒரு கணம் திகைத்தாள். பிறகு அவரை உற்றுப் பார்த்தாள். குளித்துவிட்டு வந்திருந்ததால் தலையை விரித்துப் போட்டிருந்தாள். ஒரு கையினால் முடியைக் கோதியபடி சொன்னாள், ''ஏன் வந்தால் என்னவாம்? புலியா? சிங்கமா ? கடித்தா தின்று விடுவார் ?''

அவளுடைய கேள்வியிலிருந்த அலட்சியமும், அகம்பாவமும் கருணாகரனைத் திகைக்க வைத்தன. கோபம் தலைதூக்கியது.

''படுக்கை அறையில் அவனுக்கு என்ன வேலை?'' என்று பற்களைக் கடித்தார்.

''இந்த அறைக்குள் அவர் வந்ததாக யார் சொன்னார்கள்?'' என்று பதிலுக்குக் கோபத்தில் இரைந்தாள் மதுரம்.

''இந்தத் தலையணையில் அவனுடைய பவுடரின் வாசனை எப்படி வந்தது ?''

''உங்களுக்குப் பைத்தியம்தான் பிடித்திருக்கிறது. இனி இந்தப் படுக்கையில் அவர் படுத்தார் என்றுகூடச் சொல்லிவிடுவீர்கள். இப்படிச் சந்தேகப்படுகிற பேர்வழி, கல்யாணம் செய்து கொள்வானேன் ?'' என்று இரைந்தாள் மதுரம்.

இந்தக் கேள்வி அவரை வதைத்தது.

''பௌடர் மணமாம் மணம். எங்கே வாசனை வீசுகிறது? பிரமைதான். மூளை குழம்பிப் போயிருக்கிறது. அரண்டவன் கண்ணுக்கு இருண்டதெல்லாம் பேய்'' என்று கூறிக் கொண்டே அவருடைய கையில் இருந்த தலையணையை வெடுக்கென்று பிடுங்கிக் கொண்டு, ''கமலம்.... ஏ, கமலம்'' என்று இரைந்து கத்தினாள். அடுக்களையில் இருந்த சமையல்காரி ஓடி வந்தாள். அவள் முகத்துக்கு நேராகத் தலையைத் தூக்கிப் பிடித்தபடி ''இதை முகர்ந்து பாருடி, ஏதாவது வீசுகிறதா? இவருக்கு ஏதோ வாசனை அடிக்கிறதாம்...... உனக்கு வீசுகிறதாடி ?'' என்று கத்தினாள்.

கமலம் இரண்டு மூன்று முறை முகர்ந்து பார்த்தாள்.

''சொல்லேண்டி, ஏதாவது வாசனை வீசவா செய்கிறது?'' என்று மதுரம் இரைந்தாள்.

''இல்லீங்க!'' என்றாள் கமலம் பயந்தபடி.

''சரி, போ !''

கமலம் அடுக்களைக்குள் ஓடிவிட்டாள். மதுரம் கோபத்தோடு திரும்பினாள்.

''வாசனை வீசுகிறதாம். அவ்வளவு அவ நம்பிக்கை இருந்தால், வராந்தாவில் கிடக்கும் நாயை விரட்டிவிட்டு வாசலில் உட்கார்ந்து காவல் காப்பதுதானே ?'' என்று கூறியபடி தலையணையைக் கட்டிலில் வீசி எறிந்து விட்டுக்

கோபத்துடன் அடுத்த அறைக்குப் போய் விட்டாள்.

கருணாகரன் திகைத்து வாய் அடைத்துப் போய் அமர்ந்திருந்தார். தம் மீதே அவருக்குச் சந்தேகம் வந்துவிட்டது.

பௌடர் வாசனை வீசுகிறதே! பிரமை தானோ? கமலத்துக்கு வாசனை தெரியவில்லையே......!

ஒன்றும் புரியாமல் தலையைப் பிய்த்துக் கொண்டார்.

தமக்குப் பைத்தியம் பிடித்துவிட்டதோ என்ற சந்தேகம்கூட எழுந்தது.

கலங்கிய மனத்தோடு குளித்துச் சாப்பிட்டு விட்டு வக்கீல் சங்கத்துக்குப் புறப்பட்டபோது வெளி வராந்தாவில் சோபாவில் சாய்ந்தபடி ஒரு புத்தகத்தைப் படித்துக் கொண்டிருந்தாள் மதுரம். அவளுக்குப் பக்கத்தில் பொமேரேனியன் நாய் படுத்துக் கிடந்தது. தம்மை ஒரு நாய்க்கும் கேவலமாகப் பேசி விட்டாள் என்ற நினைவு வந்ததும் கோபம் கிளர்ந்தெழுந்தது. அவளைத் திரும்பிப் பாராமலேயே கோபத்தோடு காரில் ஏறினார்.

மதுரம் சொன்ன வார்த்தைகள் நினைவில் சுழன்று கொண்டிருந்தன.

''இப்படிச் சந்தேகப்படுகிற பேர்வழி கல்யாணம் செய்து கொள்வானேன்?''

இந்தக் கேள்வி அவரை மிகவும் பாதித்து விட்டது. அவள் மீது சந்தேகப்படுவதை அவள் அறியும்படியாக நடந்து கொண்டோமே என்றுதான் வருந்தினாரே தவிர தம்முடைய சந்தேகக் குணத்தை எண்ணி வருந்தவில்லை.

முட்டாள்தனமாகக் கேள்வி கேட்டதன் விளைவாகத்தான் அவள் விழித்துக் கொண்டாள். எடுத்த எடுப்பிலேயே சிங்காரம் வந்தானா என்று கேட்டிருந்திருக்கக் கூடாது.

'நளினியின் கார் வசதியாக இருந்ததா?' என்று கேட்டிருக்க வேண்டும்.

'காரில் கூட்டம் அதிகம் இல்லையே?' என்று இரண்டாவது கேள்வியைப் போட்டிருக்க வேண்டும்.

'நாலைந்து பேர் காரில் இருந்த மாதிரி தெரிந்ததே' என்று மூன்றாவது கேள்வியைக் கேட்டிருந்தால், அவள், காரில் யார் யார் வந்தார்கள் என்பதைச் சொல்லி யிருப்பாள். சிங்காரம் வந்ததை மறைத்திருப்பாள்.

'சிங்காரம் காரில் வந்ததாகத் தெரிந்ததே' என்று நான்காவது கேள்வியைப் போடும் போது



அவன் நினைத்திருப்பான். வழியில் எங்கே யாவது இறங்கி விட்டதாகக் கூறியிருப் பான். அப்போது நளினி கூறியதை நான் சொல்லியிருந்தால் பதில் கூற முடியாமல் விழித்திருப்பான்.

ஒரு வேளை, எனது சந்தேகம் அனைத்துமே ஆதாரமற்றவையா? என்னுடைய பலவீனம் தான் இதற்கெல்லாம் காரணமோ ? என்ன கேள்வி கேட்டு விட்டாள் ! நாயை விரட்டி விட்டு வாசலில் காவல் காக்கச் சொன்னளே! என்ன திமிர்! எந்தத் தைரியத்தில் அப்படிப் பேசினுள்? ஒருவேளை எதற்கும் துணிந்து விட்டாளா ? நாய்க்கும் கேவலமாக வறுமை யில் பட்டினி கிடந்தவளுக்குப் பங்களா வாழ்க்கை கொடுத்திருக்கிறேன். இந்தக் கழுதை, என்னைப் பார்த்துக் காவல் காக்கச் சொல்கிறது.......

கோபமும் அவமானமும் நெஞ்சை அழுத்தக் கருணுகரன் தம்முடைய காரியாலயத்தை அடைந்தார். அங்கு ஏற்கனவே சிங்காரம் அமர்ந்திருந்தான். அவனைக் கண்டதும் பொறுமையால் பொசுங்கினர், கருணுகரன். அவனுடைய வாட்டசாட்டமான உருவத்தை யும், முறுக்கேறியிருந்த இளமையையும் பார்த்து உள்ளூறச் சங்கடப்பட்டார். அவ னுடைய முகத்தை உற்று நோக்கினர். அவன் உற்சாகமாக இருந்தான். அவனுடைய முகத்தில் வழக்கத்துக்கு மாருக அப்போது இருந்த மலர்ச்சிக்குக் காரணம் என்னவாக இருக்கும் என்ற ஆராய்ச்சியில் அவர் மனம் இறங்கியது. எப்போதும் ஒருவித அசட்டுப் பார்வையும், அழுமூஞ்சியுமாகக் காட்சி அளிக்கும் சிங்காரத் தின் முகத்தில் அன்று தெரிந்த மலர்ச்சியும், பூரிப்பும் கருணுகரனை வாட்டின.

''நேற்று வீட்டுக்கு வந்தாயா?'' — கருணு கரன் கேட்டார். பிறகு நாக்கைக் கடித்துக் கொண்டார். ஐயோ, இரண்டாவது முறை யும் தவறு செய்துவிட்டோமே என்று வருந்தி னர். நாக்கு, அவரையும் மீறி முந்திக் கொண்டு அந்தக் கேள்வியைக் கக்கிவிட்டது.

''எப்போது.....? விழாவுக்குப் பிறகா?''

''ஆமாம், போகிற வழியில் புத்தகத்தை வாங்கிக் கொண்டு போவோமே என்று வந் தேன்... புத்தகத்தை வாங்கிக் கொண் டேன்....'' என்ருன் சிங்காரம்.

கருணுகரனை நேருக்கு நேர் பார்க்காமல் பார்வையை அங்கும் இங்குமாக அலையவிட்டுக் கொண்டு பேசினுன்.

இனி அவனைத் தம்முடைய ஜூனியராக வைத்துக் கொள்ளக் கூடாது என்று முடிவு செய்தார் கருணுகரன். என்ன காரணம் கூறி அவனை விரட்டலாம் என்று யோசிக்கத் தொடங்கினர்.

அங்கிருந்து வக்கீல் சங்கத்துக்கு அவர் புறப்பட்டதும் சிங்காரம் அவருடைய காரில் ஏறிக் கொண்டான். அவன் பூசியிருந்த பௌடரின் நெடி காருக்குள் வீசியது.

''இதென்ன, சனியன் பிடித்த பௌட ரைத் தினமும் பூசிக் கொண்டு வருகிறுய் ? சேச்சே, ஒரே நெடி. என் ஆபீசுக்கு வரும் போது இதைப் பூசித் தொலைக்காதே !'' என்ருர் மிகுந்த எரிச்சலுடன். அவருடைய குரலில் தொனித்த வெறுப்பையும் கோபத் தையும் உணர்ந்த சிங்காரம் பயத்துடன் அவ ரைப் பார்த்தான். ஓர் அசட்டுச் சிரிப்பு அவ னுடைய இதழ்களில் நெளிந்தது.

''இது வெளிநாட்டுச் சரக்கு சார்!'' என்ருன். அவனுடைய பேச்சை அவனேடு சேர்த்து அசட்டை செய்வது போல் பதில் பேசாமல் காரைச் செலுத்தினர் கருணுகரன். அப்போது அவருடைய மனத்தில் பயங்கரப் பழி உணர்ச்சி எழுந்தது. அந்தக் காரை எங்காவது கொண்டுபோய் மோதி நொறுக்கி, அவனைக் கொன்று விட்டால் என்ன என்ற எண்ணம் தோன்றியது. அதே சமயம், கார் மோதினுல் காரைச் செலுத்தும் தமக்கும் ஆபத்து நேரிடும் என்பதை நல்ல வேளையாக அவருடைய அறிவு உணர்ந்தது. (தொடரும்)

விஷமக் கவிதை-7

வாழத் தெரிந்தவர்!

உழைக்கத் தெரிந்தோர்
உரிமையை விட்டார்;
பிழைக்கத் தெரிந்தோர்
பெருமையே நட்டார்!

- தமிழமுகன்






SRI GANESHRAMS
777
BRAND
(REGD.)

# போஸ்டரின் புகார்!

நான் ஒரு பருவப் பெண் ணல்ல. ஆனாலும் என் பக்கமாக வரும் எவருமே என்னை ஒரு சிறிது உற்றுப் பார்க்காது இருப்பதில்லை.

இத்தனைக்கும் நான் ஒரு காகிதம்தான். ஒரு தினசரிப் பத்திரிகையின் போஸ்டர். என் பின் பக்கம்கூடச் சுத்தமாய் வெள்ளையாய் இராது. ஏதாவது 'புரூப் மாட்டர்' இருக்கும்.

சென்ற பல வாரங்களாக நான் பல மன்னர்களைப் பற்றித் தெரிவித்துக் கொண்டிருக்கிறேன். அதுதான் கடத்தல் மன்னர்களைப் பற்றி... 'கடத்தல் மன்னர் தப்பி ஓடினார்', 'கடத்தல் மன்னர் சரண்', 'கடத்தல் மன்னர் நடிகை வீட்டில்', 'கடத்தல் மன்னர்..... கட்சித் தலைவர் தொடர்பு...' என்றெல்லாம். சமீபத்தில், 'கடத்தல் மன்னரை விடுவிக்கக் கோர்ட் உத்தரவு' என்பது.

'மன்னர்' என்ற வார்த்தை இன்று சிரிப்பாய்ச் சிரிக்கிறது. எதற்கெடுத்தாலும் மன்னர் பட்டம்தானா? சிறுகதை மன்னனும்! நடிப்பு மன்னனும்! இயக்குநர் மன்னனும்! டயலாக் மன்னனும்! பிரசங்க மன்னனும்!

இந்தியா குடியரசு ஆயிற்றே! மன்னர்கள் எல்லாம் மறைந்து எத்தனையோ வருடங்களாயிற்றே. அவர்களை இருக்குமிடம் தெரியாமல் செய்த ஸர்தார் பட்டேலின் நூற்றாண்டு விழா கொண்டாட்டத்தைப் பற்றிய செய்திகூட போஸ்டராகிய என் மீது அச்சாகி வந்ததே! இப்போது ராஜ்ய மன்னர் ஸ்தானத்தில் முதல் மந்திரி எனப்படும் முதல்வர் தானே இருக்கிறார்? ஆகவே,

சிறுகதை முதல்வர்
டயலாக் முதல்வர்
கடத்தல் முதல்வர்
பிக்பாக்கெட் முதல்வர்
லஞ்ச முதல்வர்

என்றெல்லாம் 'முதல்வர்' பட்டத்தை உபயோகிப்பதே சரி என்று எல்லா விஷயங்களையும் கரைத்துக் குடித்துள்ள பத்திரிகாசிரியர்களுக்கு எடுத்துக் கூற விரும்புகிறேன்.

எனக்கு இன்னொரு விஷயத்தைப் பற்றிப் பெரிய மனக்குறை. சென்ற இரண்டு ஆண்டு காலமாக, தமிழ்நாட்டில் அரசியல் போட்டா போட்டிக் கட்சிகள் ஏற்பட்டதிலிருந்து திரும்பத் திரும்பப் பின்வருவது போன்ற தலைப்புக்கள்தான் என் மீது அச்சடிக்கப் படுகின்றன.

...தரும் திடுக்கிடும் தகவல்.
...க்கு.....யின் சவால்
...யின் காட்டமான பதில்
...ம்...ம் சந்தித்த மர்மம்?

திடுக்கிடும் தகவல் என்பது சம்பந்தப்பட்ட நபர் 'தமது



மனைவிக்கு வைரத் தோடு வாங்கிப் போட்டிருக்கிறார். பணம் எப்படி வந்தது?' என்று இருக்கும்.

சவால் என்பது, 'மேடையில் அவரும் என்னுடன் பேசட்டும். யார் ஜயிக்கிறார்கள் என்று பொது மக்களே தீர்ப்புக் கூறட்டும். நான் தோல்வியுற்றால் அன்றிலிருந்து பாதாம் அல்வா சாப்பிடுவதை நிறுத்தி விட்டுப் பின்தான் , அல்வாவைச் சாப்பிட்டே உயிர் வாழ்கிறேன்' என்பது போலிருக்கும்.

இதனாலெல்லாம் வாசகர்கள் என்னை அல்லவா பொய்யன் என்று தீர்மானித்து விடுகிறார்கள்! வெட்கமாயிருக்கிறது!

பத்திரிகைகளுக்குப்போஸ்டர் வெளியிடுவது என்பது அமெரிக்காவில் ஆரம்பித்தது. உண்மையிலேயே பத்திரிகை உலக 'மன்னன்' ஆக விளங்கிய புலிட்ஸர் என்பவர் அதை ஆரம்பித்தார். 'ஸண்டே வொர்ல்டு' என்ற வாரப் பத்திரிகையின் 'போஸ்டரில்',

'கிராண்ட் ஆலனது
புதிய நாவல் ஆரம்பம்.

எந்தப் பத்திரிகாசிரியரும்
பிரசுரிக்கத் துணியாத
பாலக் களஞ்சியமான
இன உணர்ச்சிக் கதை!'

என்று போடச் செய்தார். அதைப் படித்ததும் பதினாயிரக்கணக்கான வாசகர்கள் பத்திரிகை வாங்கினார்கள். இது நடந்தது 1895ம் ஆண்டில்.

இங்கே? வாரப் பத்திரிகை போஸ்டரான என் சகா ஒரு சம்பவம் சொன்னான்: "....எழுதும் புதிய தொடர்கதை ஆரம்பம்!" என்று மூவர்ணங்களில் அதன் மீது அச்சிட்டிருந்தார்களாம். தன்னைப் பார்ப்பவர்கள் உடனே கடன் வாங்கியாவது அந்தப் பத்திரிகை இதழை வாங்கி விட்டுத்தான் மறுகாரியம் பார்ப்பார்கள் என்று என் சகா நினைத்துக் கொண்டிருந்தானாம். ஆனால் வழக்கமாகப் பத்திரிகை வாங்க வந்த பலர் போஸ்டர் தலைப்பைப் பார்த்ததும் சட்டைப் பையிலிருந்து எடுத்த காசைத் திரும்ப அதற்குள்ளேயே போட்டுக் கொண்டு போய் விட்டார்களாம்! போஸ்டர் தலைப்பில் இந்த ஆபத்தும் விளையக் கூடும்!

— அநாமதேயம்



Printed and published by V. Vaidyanathan on behalf of Messrs. Bharathan Publications Private Limited at Kalki Press, Chetput, Madras-600031. Editor: K. Rajendran



# உறுதியும் வேகமும் உள்ள ஹெர்குலிஸ் சைக்கிளில் சவாரி செய்யுங்கள்

TI/CH-7678R



உண்மை! ஹெர்குலிஸ் ஸைக்கிளை அதிக பாரத்தைத் தாங்கும் அமைப்புகளுடன் உறுதியாக உருவாக்கியுள்ளோம். உதாரணமாக உறுதியான எஃகுக் குழாய்களாலான அதன் ஃப்ரேம், வலுவேற்றிய எஃகு செயின், இலகுவாக ஓட்டும் வகையில் ஃப்ரீ-வீல், சிறப்பான பிடிமானத்துக்கும் சுலபமாக பிரேக் பிடிக்கவும் தகுந்த வகையில் சரியான வளைவுகளுடன் கூடிய ஹாண்டில் பார்.

ஹெர்குலிஸின் ஒவ்வொரு பகுதியும் இலகுவான சவாரிக்கு ஏற்ற வகையில் விஞ்ஞான முறைப்படி அமைக்கப்பட்டது.





டி ஐ சைக்கிள்ஸ் ஆஃப் இந்தியா
அம்பத்தூர், சென்னை 600053

உங்கள் பணியில் 25 ஆண்டுகள் — 1949-1974

# ஹெர்குலிஸ்

—உலகிலேயே உறுதியான சைக்கிள்.

Registered No. M. [illegible]
Registered as a Newspaper in Ceylon

# மொனேகோ
# அப்படியே சாப்பிட அருமை—
# மகுடம் வைத்துச் சாப்பிட மஜா



**வெண்ணெய் வாகினி**
வெண்ணெய்ப் பரவல்
மீது இறால் வறுவல்

**பட்டாணிப்ரியா**
தக்காளிக் கெச்சப் மீது
பச்சைநிறப் பட்டாணி

**முட்டை மோகனு**
வேகவைத்த முட்டைச்
சீவல்களின் படலம்

**சீஸ் உல்லாஸ்**
சீஸ் துண்டுகளுக்கு நடுவே
பச்சை நிறப் பட்டாணி

**ஈரல்தாரி**
சீஸ் துருவல்களின் மீது
ஈரல் துண்டங்கள்

**மசாலாட்சி**
சட்னி விழுதுக்கு மேல்
வெங்காய ஸ்லைஸ்கள்

## பார்லே மொனேகோ

இந்தியாவின் உச்ச விற்பனை
உடைய உப்பு பிஸ்கட்.

everest/814/PP-tm